B19

# ஸ்ரீராமாநுஜன் 140

ஆசிரியர்: ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச்சந்தா ரூ. 5.



1960௵ ஆகஸ்டு௴ சார்வரி௵ ஆவணி௴

# ஸ்ரீ ராமாநுஜன் 140

சென்னை ஸத்க்ரந்தப்ரகாசந ஸபையின் மூலமாக

மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சி. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 12 | 1960ஞ ஆகஸ்டுமீ<br>சார்வரிஞ ஆவணிமீ | மலர் 8 |
|---|---|---|

## திருவாய்மொழி நூற்றந்தாதி—31.

ஒருநா யகமா யுலகுக்கு வானோர் *
இருநாட்டி லேறியுய்க்கு மின்பம்—திரமாகா *
மன்னுயிர்ப் போகம்தீது மாலடிமையே யினிதாம் *
பன்னியிவை மாறனுரைப் பால். (31)

| | |
|---|---|
| உலகுக்கு | —இவ்வுலகத்துக்கெல்லாம் |
| ஒரு நாயகம் ஆய் | —ஏகாதிபதிகளாய்க் கொண்டு |
| உய்க்கும் | —அனுபவிக்கின்ற |
| இன்பம் | —ஆனந்தமும் |
| வானோர் இரு நாட்டில் ஏறி உய்க்கும் இன்பம் | தேவர்களுடைய விசாலமான சுவர்க்க லோகத்தில் சென்று அனுபவிக்கும் ஆனந்தமும் |
| திரம் ஆகா | —நிலை நிற்கமாட்டா; |
| மன் | —நித்யமான |

| | |
|---|---|
| உயிர் போகம் | ஆத்மாநுபவமாகிற கைவல்யமானது |
| தீது | —ஸ்வரூபத்திற்குச் சேராதது; |
| இவை | —என்கிற இவ்வர்த்தங்களை |
| மாறன் | —ஆழ்வார் |
| பன்னி | —விரிவாக |
| உரைப்பால் | —அருளிச் செய்ததனால் |
| மால் அடிமையே | எம்பெருமானுக்கு அடிமை செய்வதே |
| இனிது ஆம் | —போக்யமாயிருக்கும். |

* * * இவ்வுலகம் முழுவதையும் ஏகச் சத்ராதிபதிகளாய் ஆண்டு அநுபவிக்கும் இன்பமும் ஸ்வர்க்க லோகம்புக்கு அநுபவிக்குமின்பமும் ஸ்திரமாக நிற்கமாட்டாதவை; கைவல்ய மோக்ஷமாகிற ஆத்மாநுபவமானது ஸ்திரமாயிருக்கக் கூடியதாயினும் பரப்ரஹ்மாநுபவத்தைப் பற்றச் சிற்றின்பமாயிருக்கும்; ஆகையால் பகவத் விஷயத்தில் செய்யும் அடிமையொன்றே இனியதாகும்—என்று ஆழ்வார் *ஒருநாயகமாயென்கிற பதிகத்தில் விரிவாக அருளிச் செய்தாரென்றதாயிற்று.

திரம்—ஸ்திரம் (ஸ்திர) என்ற வட சொல் விகாரம்.

திருவாய்மொழியின் மூன்றும்பத்தில் முடிந்த பதிகமான *சன்மம் பல பலவென்பது ஆழ்வார்க்கு அளவு கடந்த ஆனந்தமயமாய்ச் சென்றது. தமக்கு யாதொரு குறையுமில்லை என்பதைப் பன்னிப் பன்னிப் பகர்ந்தருளினர். மற்றுமுள்ள ஸம்ஸாரிகளையும் தம்மைப் போலவே குறையற்றவர்களாக ஆக்குவதில் மிக்க குதூஹலமுடையவரான ஆழ்வார் அவர்களையும் திருத்திப் பணி கொள்ள விரும்பி உபதேசம் செய்யப் புகுகிறார் * ஒரு நாயகமாயென்கிற பதிகத்தில். திருவாய்மொழியில் ஒவ்வொரு பத்திலும் பரோபதேச ரூபமாக ஒவ்வொரு பதிகம் அவதரிக்கும். முதற்பத்திலே * வீடுமின் முற்றவும்* என்கிற திருவாய்

மொழியும், இரண்டாம் பத்தில் * அணைவதரவணைமேல்* என்கிற திருவாய்மொழியும், மூன்றும் பத்தில் * சொன்னால் விரோதப்பதிகமும் போலே நான்காம் பத்தில் இத்திருவாய் மொழி உபதேச பரமாய்ச் செல்லா நின்றது.

*சொன்னால் விரோதத்தில் அற்பர்களான மனிசர்களைத் துதிப்பது பெருங்கேடு என்று உபதேசித்தார். உலகில் பலர் நரஸ்துதி செய்யப் புகுவது சில பிரயோஜனங்களுக்காகவாதலால் அந்தப் பிரயோஜனங்கள் அஸ்திரமாயிருக்கும் படியை நன்கு எடுத்துக் காட்டினால் அவிவேகிகளும் உணர்ந்து திருந்தக்கூடும் என்று பார்த்து, பகவத் ப்ராப்தி தவிர மற்ற பிரயோஜனங்கள் யாவும் அல்பத்வம்—அஸ்திரத்வம் முதலிய தோஷங்களினால் துஷ்டங்களாயிருக்கு மாற்றை விரித்துரைக்கின்றார்.

பகவத் கீதையில் ஏழாவது அத்யாயத்தில் (16) "𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌾 𑌭𑌜𑌨𑍍𑌤𑍇 𑌮𑌾𑌂 𑌜𑌨𑌾𑌃 𑌸𑍁𑌕𑍃𑌤𑌿𑌨𑍋𑌰𑍍𑌜𑍁𑌨। 𑌆𑌰𑍍𑌤𑍋 𑌜𑌿𑌜𑍍𑌞𑌾𑌸𑍁𑌰𑌰𑍍𑌥𑌾𑌰𑍍𑌥𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑍀 𑌚 𑌭𑌰𑌤𑌰𑍍𑌷𑌭"—*[சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந!, ஆர்த்தோ ஜிஜ்ஞாஸு:ர்த்தார்த்தீ ஜ்ஞாநீ ச பரதர்ஷப*] என்று நான்கு வகைப்பட்ட அதிகாரிகள் தன்னைவந்து பற்றுவதாகக் கண்ணபிரான் கூறினன். அவர்கள் யாவரென்னில்; [1. ஆர்த்த:] இழந்துபோன செல்வத்தை மீண்டும் அடைய விரும்புமவன். [2. அர்த்தார்த்தீ] முதலிலேயே செல்வமில்லாமையால் புதிதாக அதனை அடைய விரும்புமவன். [3. ஜிஜ்ஞாஸு:] பிரக்ருதிக்குப் புறம்பான ஆத்மாவை அநுபவிப்பதாகிற கைவல்ய மோக்ஷத்தை விரும்புமவன். [4. ஜ்ஞாநீ] 'ஆத்ம ஸ்வரூபம் எம்பெருமானுக்கே சேஷப்பட்டிருக்கும் தன்மையது' என்கிற அறிவை உடையவனாய் ஆத்மாநுபவ மாத்திரத்திலே நிற்க மாட்டாமல் எம்பெருமானைப் பெற விரும்பி அவனையே பெரும்பேறாக நினைத்திருப்பவன். ஆக இந்நால்வரும் ஸுக்ருதிகள் என்று பேசப்பட்டார்கள்: ஞானி தவிர மற்றவர்களை துஷ்க்ருதிகள் என்று பேச வேண்டியிருக்க ஸுக்ருதிகள் என்று பேசின பகவானுடைய திருவுள்ளம் யாதெனில்; 'அல்பமாயும் அஸ்திரமாயும் இருக்கின்ற ப்ரயோஜநாந்தரத்தை விரும்பினார்களாகிலும், இந்தப் பலன்களுக்காகப் பிற தெய்வங்கள் பக்கலில் சென்று பல்லைக் காட்டாமல் நம்மிடத்திற்கே வந்து யாசிக்கலானார்களே!' என்கிற உவப்பேயாம். நால்வரையும் வாசியற ஸுக்ருதிகள் என்று சொல்லிவிட்டாலும் ஞானியே சிறந்தவன் என்பதை அந்த கீதாசார்யனே அங்கு மேல் சுலோகங்களினால் வ்யக்தமாகக் கூறுகின்றான்; [தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர் விசிஷ்யதே, ஜ்ஞாநீ து ஆத்மைவ மே மதம்.] இத்யாதி ச்லோகங்கள் காண்க. (இவற்றின் பொருள்:—) இவர்களில் ஞானிதான் மிகவும் சிறந்தவன், ஏனெனில் அவன் நம்மை அடைய வேண்டுமென்று நம்மையே எப்போதும் நாடியவனாய் மற்றொன்றிலும் பற்றின்றி விசேஷமாய் நம்மிடத்தில் மாத்திரம் பக்தியுடையவனாயிருக்கிறான்......ஞானியானவன் என் ஸ்வரூபத்தைத் தரிக்கின்ற ஆத்மாவென்றே என்னுடைய ஸித்தாந்தம்—என்பதாம்.

இப்படிப்பட்ட ஞானியாக இருந்து வாழ்வதே நன்று என்றும், ஐச்வர்யகைவல்யங்களில் விருப்பம் கொள்வது பயனற்றது என்றும் பரக்க உபதேசிப்பதே * ஒருநாயகத் திருவாய்மொழியின் ப்ரமேயமாகும். இதில் ஐச்வர்யம் அஸ்திரம் என்னுமிடத்தைப் பல பாசுரங்களாலும், ஸ்வர்க்க போகத்தினுடையவும் கைவல்ய மோக்ஷத்தினுடையவும் ஹேயத்வத்தை ஒவ்வொரு பாசுரத்தாலும், பகவத் ப்ராப்தியின் உபாதேயத்வத்தைப் பாசுரந்தோறும் அருளிச் செய்கிறார். ... .... ... ... (31)

ஸ்ரீ:.

# ஸ்ரீராமாநுஜன் அன்பர்களுக்கு அறிவிப்பு.

---

ஸஹ்ருதய ஸஹ்ருந்மணிகளுக்குப் பத்ராதிபர் செய்யும் விண்ணப்பம். சென்ற 139 நெ. ஸ்ரீராமாநுஜனில் ஸ்ரீ காஞ்சீ ஸ்தோத்ரமாலிகை உரையுடன் வெளிவரத் தொடங்கி ஸாவஶேஷமாய் நிற்கிறது. ஸ்ரீ யதோக்தகாரி ஸ்தோத்ரம் அஷ்டபுஜாஷ்டகம் காமாஸிகாஷ்டகம் என்னுமிவற்றின் உரை முடிவடைந்து தீபப்ரகாஶ ஸ்தோத்ரம்—ஶரணாகதி தீபிகை ஆரம்பமாகியுள்ளது. அடுத்தபடி வரதராஜ பஞ்சாஶத்து ஆகவேண்டும். இவை தொடர்ச்சியாக வெளிவருவதை அன்பர்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருக்கிறீர்கள். நாமும் இவற்றை நிச்ஶேஷமாக வெளியிட்டு க்ருதக்ருத்யர்களாகப் பாரித்திருக்கின்றோம். இங்ஙிலையில் ஞானச்சுடர் விளக்கு என்கிற வொரு புத்தகம் (56 பக்கம் கொண்டது) சென்ற வாரத்தில் நமக்குக் கிடைத்தது. அதைப் பரிபூர்த்தியாகக் கண்டித்துத் தொலைக்கவேண்டிய ஆவச்யகதை ஏற்பட்டது. அதிலுள்ள அஸம்பத்த ப்ரலாபங்களினால் சில பாமரர்கள் ஏகதேசம் வஞ்சிக்கப்படலாமென்று தோன்றியதனால் அதை வேரோடே களைந்தொழிக்கவேண்டியதாயிற்று. இந்த ஸஞ்சிகை பூர்த்தியாக அந்த கர்த்தவ்யத்தையே மேற்கொண்டிருக்கின்றது. இதிலும் வ்யாக்யானம் பூர்த்தியடையாமல் ஸாவஶேஷமாய் நிற்கிறது. உடனே நிச்சேஷமாகிவிடும். இது நிற்க.

வாத விவாதங்கள் ருஜுவான வழியில் நடைபெற ப்ராப்தம். வீணான வாத விவாதங்களைக் கிளப்பினவர்கள் நேர் வழியைப்பற்றி நின்று நிரூபணங்கள் செய்ய விஷயமற்றவர்களாகையாலே ஒவ்வொன்றிலும் கோணலான வழியையே கைப்பற்றியுள்ளார்களென்பது இந்த ஸஞ்சிகையினால் வெட்ட வெளிச்சமாகும். "ஏதோ இது வீண் வம்புச் சண்டை விஷயம்" என்று வெறுப்போ வைராக்யமோ கொள்வார் கொள்க. வாத விவாத விஷயமானாலும் அதிலிருந்து வெளியாகின்ற தத்துவங்களைத் தெரிந்து கொள்ளவேண்டியது அவஶ்யமேயென்று ருசி கொண்டிருப்பவர்கள் இந்த ஸஞ்சிகையைப் பூர்த்தியாக வாசியாமற் போனாலும் மேலுள்ள முகவுரையை மட்டும் வாசித்தாலும் போதும். இந்த அறிவிப்பையும் முகவுரையின் ஒரு பகுதியாகக் கொண்மின்.

மேலே குறிப்பிட்ட புத்தகத்தின் அட்டையில் முன்னுரை என்றிட்டு நரஸிம்ஹதாதாசாரியர்க்கு அண்ணங்கராசாரிய ரெழுதிய கடிதமென்று ஒன்று வெளியிட்டிருக்கிறார்கள். எந்த நரஸிம்ஹதாதாசாரிய ரென்று காட்டவில்லை. "அவர் உடல் நலமின்றி மூன்று ஆண்டுகளாக இருக்கிறவர்" என்று ஒருவரியெழுதியிருக்கிறது. அஸ்து. அவருக்கு நாம் கடிதமெழுதி அத்துடன் சில புத்தகங்களையனுப்பினதாக எழுதியிருக்கிறது. வாஸ்தவமே. அனுப்பின புத்தகங்களின் பெயர்களைக் கட்டாயம் குறிப்பிட்டிருக்கவேண்டும். குறிப்பிட்டிருந்தால் அதிலிருந்தே இவர்களின் (அ) யோக்யதை வெளியாகிவிடுமாதலால் அதைக் குறிப்பிட்டிலர். புத்தகங்களைப் பெற்றுக் கொண்டவவர்,

> "ஸ்வாமி ஏழையின் மீது இவ்வளவு கருணைகொண்டு விலையுயர்ந்த ஸ்ரீ கோசங்களை அநுக்ரஹித்ததற்கு என்ன கைம்மாறு செய்வதென்று தெரியவில்லை. அவற்றை வாசிக்க வாசிக்க விளையும் ஆனந்தத்தை என்னவென்று எழுதுவேன். கியாடலாகையும் அனுப்பியிருப்பதனால் இன்னும் பல ஸ்ரீ கோசங்களை யாசித்துப் பெறவே ருசி யெழுகின்றது. அஜ்ஞாநாந்தகாரம் அடியோடு தொலையும்படியாகவும், வீணான பிடிவாதங்கள் வேரோடே பறியுண்டு போம்படியாகவும் விஷயங்களை மிகத்தெளிவாக

அ

எழுதுகிறவர் கடல்சூழ் நிலத்தில் ஸ்வாமி தவிர வேறு யாருமில்லையென்று ஸத்யம் செய்வேன். ஸ்வாமியின் ஸ்ரீ ஸூக்தி வைபவங்களைப்பற்றி ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ் ராஜகாசார்ய. ஸ்ரீரங்கம்., தென்பரையாண்டவனும் ஸ்ரீ. உ. வே. ஸர். S. வரதா சார்ய ஸ்வாமியும், பரமாப்தரான D. ராமஸ்வாமி ஐயங்காரும் மற்றும் பல பிரமுகர் களும் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதி வெளியிட்டிருக்கின்ற மதிப்புரைகள் யதார்த்தம் யதார்த்தம் என்று மதிக்கும்படியாகவே ஒவ்வொரு ஸ்ரீகோசமும் அமைந்திருக்கின்றது. தற்காலம் அடியேன் மிகவும் அசக்தனுயிருப்ப தால் இனி யாசிக்கும் புத்தகங்களுக்குப் பாதிவிலை ஸமர்ப்பித்துக் கொள்ளுகிறேன். கிருபையுடன் அங்கீகரித்து அடியேனுக்கு ஜீவனுதாரமாகவும் உஜ்ஜீவனோபாய மாகவும் ஸ்ரீகோசங்களை அநுக்ரஹித்து வரவேணும்".

என்று பதில் எழுதி யனுப்பி யிருக்கின்றார். அது அப்படியிருக்க, இவர்கள் எழுதி யிருப்பதாவது,

"அப்புத்தகங்களில் ஸ்வாமி தேசிகனையும் தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களையும் நிறைய வசை மொழி பாடியுள்ளார்......இவர் (ப்ர—அ.) தமக்குள்ள ஆர்த்திக ஸௌகரியங்களையும் பயன்படுத்திக்கொண்டு தினமும் ஸ்ரீ தேசிக தூஷணமும் வடகலை ஸம்ப்ரதாய தூஷணமுமே பரமோத்தேச்யமாக எண்ணி விண் கந்தைகளை யெழுதி பாமரர்களை மயக்குமிவரால் கல்பிக்கப்பட்ட இருளனைத்தும் ஸ்ரீ தேவாதி ராஜனுடைய நியமனத் தால் ஜ்வலிக்குமிந்த ஞானச்சுடர் விளக்கு மூலம் நீங்குமென நம்புகிறேன். ஐயா, ஸ்ரீநிவாஸ தாததாஸன்" என்று.

இந்த தாததாஸ் யாரென்பது கிடக்கட்டும். இந்நபரை ஆளாக்கியிருப்பவர்கள் இன்னுரென் பதை அடுத்த முகவுரையின் முகப்பிலேயே தெரிந்துகொள்வீர்கள். அதுவும் கிடக்க. உலகத்தில் ஸ்வயம் ஸ்வைரிணியாயிருப்பவள் தன்னை எல்லாரும் நிந்திப்பர்களென்று தானகவே கருதி, பிறரை வையத்தொடங்குவதும், அதற்கு அவதாரிகையாகச் சிலர் தன்னை ஸவததாய் வெளியிட்டுக் கொள்வதும் இயல்பு. அதுவேதான் இவர்களின் பணியும். தேசிகதூஷணமும் வடகலையாருடைய தூஷணமுமே நமக்குப் பரமோத்தேச்யமென்று இவர்கள் பறைசாற்றி வருகிறார்கள். இந்த வார்த்தையை இவர்கள் வடகலை லௌகிகத் தலைவர்களிடம் நேரில் சென்று முறையிடுவதுமுண்டு. எதற்காக வென்னில், "அவருடைய தூஷணைப் புத்தகங் களுக்கு நாங்கள் சமாரியாக பதிலெழுதவேண்டும், அதை அச்சிட ரூ 500, 600 ஆகும்; ஆயிரமுமாகும். இதை நீங்கள் தரவேணும்" என்று சொல்லிப் பொருள் பறிப்பதற்காக. பிறகு அப்பெரியார்கள் "P. B. A. எழுதின தூஷணப் புத்தகங்களை இப்படி கொண்டு வாருங்கள் பார்ப்போம்' என்று சொன்னல் ஆகட்டுமென்று சொல்லிவந்து மறுபடியும் அவர்களிடம தலைகாட்டமாட்டார்கள். இதை நான் வடகலைப் பிரமுகர்கள் பலரிடத்தில் பலகால் கேட்டிருக்கிறேன்.

'தேசிகனை தூஷிப்பது. வடகலையார்களை தூஷிப்பது' என்றால் என்ன அர்த்தம்? தூஷிப்பதென்பது குற்றம் குறைகளைச் சொல்லி நிந்திப்பதல்லவா? ஞானக்கடலாய் அனுஷ் டான நிதியாய் வைராக்ய ஸம்பந்நராய் அத்விதீயாசார்ய ஸார்வபௌமராயெழுந்தருளியிருந்த ஸ்வாமி தேசிகனை க்ரிமிகீட ஸத்ருசர்களான நாம் என்னவென்று தூஷிக்கமுடியும். தூஷித் தால் நமக்கன்றோ ஆத்மநாசமாகும். அதற்கு இவர்கள் வருந்த அவசியமென்ன?

வடகலையார்களை தூஷிப்பதென்பதுபற்றிச் சிறிது விரிவாகத் தெரிவிக்கிறேன். ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யமாகச் சொல்லுகிறேன். அடியேனுக்குத் தென்கலையார்களிடத்திற் போலவே வடகலையார்களிடத்திலும் ப்ரீதியும் மதிப்பும் பக்ஷபாதமுமுண்டு. ஏனென்றால், ஜ்ஞாநாநுஷ்டான ஸம்பந்நர்கள் அந்த வகுப்பிலும் விளங்குகிறார்கள். அந்த மஹான்களின் திருவுருவப் படங்களையும் சேகரித்து வெளியிட்டிருக்கின்றேன். என் வாழ்க்கையில் இதுவொரு பெரிய காரியம். இதை வேறு யாரும் செய்தது கிடையாது. அவர்களுக்கும் யதாசக்தி ஸத்காரம் செய்வதுண்டு. அவர்களை நாம் தூஷிக்கிறோமென்றால் இது மிகவும் அநுசிதமான பேச்சேயாகும். உலகோர்கள் ஆவலுடன் எதிர்பார்க்கக் கூடிய வியாக்கியானங்களையே நாம் பெரும்பாலும் அல்லும் பகலும் எழுதிவருவது. இப்படிப்பட்ட வியாக்கியானங்களையோ உபந்யாஸங்களையோ எழுதி லோகோபகாரம் செய்ய சக்தியற்றவர்கள் தாங்கள் ஸதாசார்ய தூஷணம் பண்ணுகிறார்கள். அந்த தூஷணங்கள் மிகவும் அஸமஞ்ஜஸங்களும் அநுசிதங்களுமாயிருக்கையாலே அவற்றை மறுவாய் திறக்க இடமில்லாதபடி நாம் களைந்தெறிகிறோம். அப்போது ஸாஹஸிகமாக எழுதவேண்டிய விஷயங்களையும் ப்ராமாணிகமாக எழுதுகிறோம். அதற்கு நேர்நின்று விடைகூற முடியாமையாலே இவர்கள் நாம் தேசிகனை தூஷிப்பதாகவும் வடகலையார்களை தூஷிப்பதாகவும் தப்பு ப்ரசாரங்கள் செய்யத் தலைப்பட்டு விட்டார்கள்.

இங்குக் கூசாமல் ஓர் உண்மையைத் தெரிவிக்கிறேன் கேளுங்கள். ஸ்ரீமான் D. ராமஸ்வாமி ஐயங்காரென்பவரே ஆசார்ய தூஷணைகளுக்கு அடியிட்டவர். அவர் 1944ஆம் ஆண்டில் தேசிக சரித்திரமெழுதி வெளியிட்டிருக்கிறார். தேசிக சரித்திரமென்று பெயர். தென்னாசார்ய தூஷணமென்றே அதற்கு இவர் பெயரிட்டிருக்கவேண்டும். அவரெழுதியுள்ள தூஷணைகளை அப்படியே இதோ எடுத்துக்காட்டுகிறேன்;

(1) "தேசிகருடைய காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய ஸ்தானம் வஹித்திருந்த ஸ்ரீ வைஷ்ணவர்கள் திவ்ய ப்ரபந்தத்தை மட்டும் அதிகரித்து ஸ்வகோஷ்டியில் உபந்யாஸம் செய்ய வல்லவர்களாகமாத்திர மிருந்தார்களே யன்றி ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்து பிறமதத்தினரோடு வாதஞ்செய்ய உரியராக இல்லை." (பக்கம் 8)

(2) "ஸ்ரீபாஷ்யாதிகளை நன்கு கற்றுப் பன்முறை ப்ரவசனஞ் செய்த தேசிகன் விஷயத்தில், அதற்கு முன் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யகம் செய்து வந்தவர்களும் அவர்கள் சிஷ்யர்களும் பல்வகையான இடையூறுகளையும் ஹிம்ஸைகளையும் புரியத் தலைப்பட்டனர். அவர்களால் ஸ்வாமியடைந்த கஷ்டங்கள் பல." (பக்கம் 10).

(3) "தேசிகனிடம் பொறாமை கொண்டவருள் ஒருவரான அழகிய மணவாளப் பெருமாள்நாயனார் (ஆசார்ய ஹ்ருதயகாரர்) இவருடன் போட்டியிட்டதன் பலனாக ஸ்வாமியிடமிருந்து ஸ்ரீ பாதுகா ஸஹஸ்ரமென்ற க்ரந்தம் தோன்றியது.'' (பக்கம் 11)

(4) "ஆறாயிரப்படிக்குப் பின் தோன்றிய பல வியாக்யானங்களிலுள்ள தோஷங்களைக் கவனித்து அவற்றையெல்லாம் களைந்து தேசிகனருளிச்செய்த எழுபத்துநாலாயிரம கிரந்தங்கள் கொண்ட நிகம பரிமளமென்னும் ஓர் அழகிய வியாக்கியானம் ஸ்வாமியாலே தம் குமாரருக்கு காலக்ஷேபமாக ப்ரவசனம் செய்யப்பட்டிருக்கிறது."

என்கிற இவை இவர் செய்திருக்கிற ஸதாசார்ய தூஷணங்களில் தலையானவை; இன்னும் பலவுள. இந்த விஷயங்கள் ப்ராமாணிகமான தேசிக சரித்திர நூல்களில் சிறிதும் காணப்படாதவை. எந்த நூலை ஆதாரமாகக் கொண்டு இந்த அட்வகேட் இந்த தூஷணைகளைப் பெய்திருக்கின்றாரென்று கேட்டால் வாயைக் கையைத் திறக்கமாட்டார்.

1-ல் "தேசிகருடைய காலத்தில் ஸ்ரீரங்கத்தில் இருந்த சிலர்" என்னுமல் ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய ஸ்தானம் வஹித்திருந்த ஸ்ரீ வைஷ்ணவர்களென்று இவர் குறிப்பிடுவது லோகாசார்யரென்று புகழ்பெற்ற நம்பிள்ளையின் சிஷ்யவர்க்கங்களையே யென்பது வெளிப்படை. இவர்தாமே மேலே அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரென்று திருநாமத்தைச் ஸ்பஷ்டமாகவே குறிப்பிட்டுமிருக்கிறார். அவர் வடக்குத் திருவீதிப் பிள்ளையின் இளைய திருக்குமாரர். ஸ்ரீவசந பூஷணாதிக்ரந்த கர்த்தாவான பிள்ளை லோகாசார்யருடைய திருத்தம்பியார். இவரும் இவரைப் போன்றவர்களுமான ஆசாரியர்கள் [தென்னாசார்ய ஸம்பிரதாயத் தலைவர்கள்] திவ்ய ப்ரபந்தத்தை மட்டுமே அதிகரித்தவர்களென்றும் ஸ்ரீபாஷ்யாதி க்ரந்தங்களைப் பரிசயம் செய்யாதவர்களென்றும் இவர் எந்த பிரமாணங்கொண்டு அறிந்தாரென்று விசாரிக்க.

இவருடைய படிப்புக்கும் ஞானத்திற்கும் தக்கவாறு எவ்வளவு ப்ரஸங்கம் உசிதமோ அவ்வளவோடு நின்றிருக்கவேண்டுமிவர். அப்போதே (அதாவது 1944 ஆம் வருஷத்திலேயே) அடுத்த வாரத்திலேயே * [illegible] ஶரவர்ஷாணாம் விவ்யதே ராக்ஷஸேஶ்வர: ॥ * என்கிற ஸ்ரீ ராமாயண ச்லோகத்தை நினைப்பூட்டும்படியான தசையை ப்ரத்யுத்தர சரமாரிகளால் இவர் அடைந்தேயிருக்கிறார். ஏதாவது மறுவாய் திறந்ததுண்டோ? ஆனாலும் அந்த அபத்த சரித்திரத்தை அடிக்கடி மறுபதிப்பு (Reprint) செய்துவருகிறார். அதிலிருந்து தோன்றிய விவாதமே ஓயாது வளர்ந்து செல்லா நின்றது. முதலில் தப்புச் சரித்திரமெழுதி விவாதத்தை விளைவித்த விவர் ப்ராமாணிகராயிருந்தால் "நான் எழுதிய சரித்திரம் யுக்தமானதுதான்; அதன்மேல் வெளிவந்த மறுப்புக்கு இதோ நான் விடையிறுக்கிறேன்" என்று நேர் வழியில் நின்று ஸ்வோக்திகளை ஸ்தாபித்துக் கொள்ளவேணும். அதற்கு இவர் ஆசைப்படவேயில்லை. உண்மையை யுணர்ந்து தெளிந்தவராய் "P- B.. A. ஸ்வாமி எது எழுதினாலும் அது தான் ஸித்தாந்தமாய் நிற்கும்; அதன்மேல் எத்தனை பேர் எத்தனை யெழுதினாலும் பலனென்றும் காணலாகாது; விஷயங்களைத் தேங்காயுடைப்பதுபோல் வெட்டொன்று துண்டிரண்டென்று உடைத்துக்காட்டுவர் ஸ்வாமி" என்று மதிப்புரை தந்து விச்ராந்தரானார். ஆனாலும் தாமெழுதின அந்த மதிப்புரைதன்னிலேயே "இவ்வளவு சக்தி வாய்ந்த மஹா புருஷர் விஷயத்தில் அஸூயையையும் பொறாமையையும் எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம்" என்று மெழுதியிருந்தாராகையாலே அந்த வாக்கும் பலிக்கின்றது. "எத்திக்கிலிருந்தும் எதிர்பார்க்கலாம்" என்று இவர் எழுதியதைமட்டும் வியாக்கியானிப்பதானால் ஓர் ஆறாயிரப் படியாகும். நிகமபரிமள ஸங்க்யையுமாகும்.

தானேயெழுதியதன்சரிதை யென்று அடியேனெழுதி வெளியிட்டுள்ள ஸ்வகீய சரித்திரத்தில் இவரைப்பற்றிப் பலகால் ப்ரஸ்தாவித்திருக்கிறேன். அதில் (397, 398 பக்கங்களில், இவர் எழுதிய தென்னாசார்ய தூஷணைகளை விரிவாக எடுத்துக்காட்டி "ஸ்ரீபாஷ்யத்திலோ பகவத் விஷயத்திலோ ப்ரவேசலேசமாவது இருக்கப் பெற்றவர்கள் இங்ஙனே தூஷித்திருந்தால் ஸஹிக்கலாம்; ஒன்றையுமறியாதவொருவர் ஆசாரியர்களின் ஞானத்தை அளவிட முன் வந்ததுண்டே இதுதான் அஸஹ்யாபசாரமென்பது. தேசிகனுக்குண்டான ஸ்ரீ பாஷ்யஜ்ஞானமும் பகவத் விஷய ஜ்ஞானமும் பகவத் பக்தியுமெல்லாம் ஆறாயிரப் படிக்குப்பிற்பட்ட ஸதாசார்ய ஸ்ரீஸூக்தி ரத்னங்களின் ஸேவையையே மூலமாகவுடையவை என்கிற தத்துவம் நவீனர்களின் புத்தியில் எளிதாக ஏறமாட்டாதாகிலும் அடியேனுடைய

நூல்களை யெல்லாம் ஆழ்ந்து அநுபவிப்பவர்களுக்கு அறிய வெளிதே". என்றெழுதியிருக்கிறேன். அதிலேயே (பக்கம் 406ல்) இவரைக் கொண்டாடியெழுதியிருப்பதையும் காண்க;

"ஸ்ரீமான். D. ராமஸ்வாமி ஐயங்காரிடத்தில் மிகச் சிறந்த வொரு ஸ்வபாவமுண்டு; அதை நாம் அபலாபம் செய்யாமல் அகமகிழ்ச்சியுடன் வெளியிடக் கடமைப் பட்டிருக்கிறோம். (அதாவது) ஏதோ காரணவசாத் தாம் அபத்தமாகவும் அஸம்பத்தமாகவும் பல எழுதிவிட்டாலும் உடனே நம்முடைய மறுப்புரைகளினால் தெளிவு பெற்று எதிரம்பு கோக்காமலிருந்துவிடுவர்; மற்றவர்களைப்போல் எதையாவது எழுதி நிந்திக்கும் வழியைக் கனவிலுமறியார். பிறர் யாரேனும் பதிலெழுதப் புறப் பட்டாலும் * அப்ரமேயம் ஹி தத் தேஜ: * என்று உபதேசித்த மாரீசனைப் போலே பலவுமுபதேசித்து விலக்குவர். இஃதொன்று இந்தமஹானிடத்தில் நாம்கண்ட நலம்."

என்றெழுதியிருக்கிறேன். ஸ்ரீ வசநபூஷணத்தில் "ப்ரஜையைக் கிணற்றின் கரையில் நின்றும் வாங்கா தொழிந்தால் தாயே தள்ளினாள் என்னக்கடவதிறே" என்றருளிச்செய்த கணக்கிலே அவயெ ப்ரஜைகளை விலக்க சக்தரான இவர் விலக்கா தொழிந்தால் என்ன சொல்லக் கடவதென்பதை நாமோ சொல்லவேண்டும். "மம மாயா துரத்யயா" என்ற கீதா வசனத்திற்குத் தப்பிப் பிழைக்க யாரால் முடியும்.

ஸ்ரீக்ருத விவாதச்சுவடியில் ஒரு விஷமம் காட்டி நிற்கிறேன். அதில் (பக்கம் 47ல்) திருக்கோட்டியூர் ஸ்வாமி விஷயம் என்று மகுடமிட்டு ஒன்றெழுதப் பட்டுள்ளது. (அதாவது) கீர்த்தி மூர்த்தியான ஹோஷ்டிபுரம் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி திருநாட்டுக்கெழுந்தருளினபோது ந்ருஸிம்ஹப்ரியாபத்ரிகையில் அந்த ஸ்வாமியைப் பற்றித் தனி நினைவு மலரொன்று வெளியிட்டார்களாம். அதில் ஒருவர் "அந்த ஸ்வாமியை எம்பெருமான் தன்னடிச்சோதிக்குக் கொண்டு போனான்" என்று எழுதினாராம். அப்போது வாஸுதேவன் என்பானொருவன் ஒரு துண்டுப்பிரசுரம் வெளியிட்டானாம். அதில் "எம்பெருமான் அவதார ஸமாப்தியைச் செய்துகொண்டு ஸ்வஸ்தானத்துக்கு எள்ளினால் அதை தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினதாகச் சொல்லலாமேதவிர, பாகவதர்கள் திருநாட்டுக்கு எள்ளுவதை அப்படிச் சொல்வதில்லை". என்று எழுதப்பட்டிருந்ததாம். இங்கு எம்பெருமான் இவரைத் தன்னடிச் சோதிக்குக் கொண்டு போனானென்று எழுதப் பட்டுள்ளதே யொழிய, திருக்கோட்டியூர் ஸ்வாமி தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினாரென்று எழுதப்பட்டிருக்கவில்லை யென்றும், வாஸுதேவனென்ற பெயரால் இப்படி தூஷித்தவர் P. B. A. தான் என்றும், விஷயத்தைப் புரிந்துகொள்ளாமல் அக்கிலிபிக்கிலி ஞானத்தாலே வெள்ளைக் காகிதத்தைக் கறுப்பாக்கி விட்டாரென்றும் எழுதியுள்ளது. இப்படி அஸ்தானே மருள்கிறமருள் நமக்கு இளமைப்பிராயத்திலுங்கூட இல்லையென்று உலகமெல்லாம் ஸத்யம்பண்ணிச்சொல்லும். "எம்பெருமான் இவரைத் தன்னடிச் சோதிக்குக் கொண்டுபோனான்" என்று பங்க்தியிருந்தால் குற்றமற்ற இப்பங்க்தியில் நமக்குக் கலக்கம் கனவிலுமுண்டாகாது. இவர்களுடைய வகுப்பில் க்ரந்தமெழுதுகிறவர்கள் அக்கிலிபிக்கிலி ஞானமுடையவர்களென்பதை நாம் நன்கு நிரூபித்து எழுதுவது வழக்கம். அந்த அவத்யத்தை இவர்களால் பரிஹரித்துக்கொள்ள முடியாதாதலால் அதை நம்மேலேறிட்டுக் களிக்கப் பார்க்கிறார்கள். பல நூற்றுக்கணக்கான நம்முடைய நூல்களிலிருந்து அணுவளவும் எடுத்துக்காட்டி தூஷிக்க இவர்களுக்கு விஷயம் கிடைக்காமையினாலே பொய்யான கதை யொன்றைக் கல்பனைசெய்து வாஸுதேவனென்பவன் ஏதோ பிரசுரம் செய்ததாகவும் அது நம்முடைய செயலாகவும் பொய்யெழுதி அதில் இது இருப்பதாக தூஷிக்கிறார்கள்.

ஆ

இதன் உண்மையைக் கேண்மின்; காஞ்சியில் அங்யதாஜ்ஞானநிதி அய்யா க்ருஷ்ண ரென்று ஒருவரிருந்தார். அவர் திருப்புட்குழி ஸ்வாமி வைபவமென்று எழுதி ஸ்ரீ. V. V. ஸ்ரீநிவாஸய்யங்கார் மூலமாக வேதாந்த தீபிகையில் அச்சிடுவித்தார். அதில் "திருப்புட்குழி ஸ்வாமி தன்னடிச் சோதிக்கு எழுந்தருளினர்" என்றெழுதினர். மற்றும் பல பல அஸம்பத்தங்களுமெழுதினர். அவற்றையெல்லாம் களைந்து நாம் திருப்புட்குழி ஸ்வாமி வைபவபரிஷ்காரமென்றும் தத்பரிசிஷ்டமென்றும் 4. 5 நூல்களை அப்போதே வெளியிட்டோம். அது வொரு பெரிய பாரதமாக நடந்த விஷயம். இந்த தன்னடிச் சோதி விஷயம் அவற்றில் வந்திருக்கிறது. அவர் தவருக எழுதினதை நாமெடுத்துக் காட்டியிருக்கிரேம். அதை வி. வி. ஸ்ரீ. கடாக்ஷித்து மிகவுகந்து அந்த (தந்திக்குருவி) தாதாசாரியரை நோக்கி "ஓய்! இச்சிறு விஷயங்கூடத் தெரியாமல் எதற்காக நீர் எழுதப் புறப்படுகிறீர்?" என்று கடிந்தார். இதைத் தானேயெழுதிய தன் சரிதையில் (பக்கம் 394 ல்) வெகு சுருக்கமாகவும் குறிப்பாகவும் காட்டியிருக்கிறேன். தன் குரவர் இப்படியெல்லாம் பங்கப்பட்டொழிந்தாரே யென்றுண்டான வயிற்றெரிச்சலால் அதைத் தொடாமல் விட்டு வேறுவிதமாகக் கல்பனை செய்து தூஷிக்க வழி தேடுமிவர்கள் பழைய ஸம்பங்களையெல்லாம் புதுப்பித்துக் கொள்ளுகிருர்களித்தனை.

## முடிவாக இந்த விஷயமொன்று கவனிக்கத்தக்கது.

மாத்வ மடங்களில் உடுபி ஸ்ரீபண்டாரகேரி மடமென்பது ஒன்று. இந்த மடாதிபதி தற்காலம் பெங்களூரில் வாழ்கிருர். அங்கிருந்து நேற்று 1-9-60 தேதியில் ஸம்ஸ்க்ருத பாஷையில் ஒரு சிறு விளம்பரமச்சிட்டு நாடெங்கும் பிரசுரம் செய்திருக்கிருர். விஷயமென்ன வென்றால், ப்ரஹ்ம ஸ்ரீ அனந்தக்ருஷ்ணசாஸ்த்ரிகள் மத்வமத க்ரந்த மொன்றை தூஷித்து ஏதோ எழுதி யிருக்கிருராம். அது விரைவில் கண்டிக்கப்படுமென்று எழுதிவிட்டு

"நீர் எழுதியிருக்கிற தூஷணைகளை பண்டிதர்களின் முன்னிலையில் ஸரியானதென்று ஸ்தாபித்து விடுவீரானல் ஒவ்வொரு தூஷணத்திற்கும் ஆயிரம் ரூபாய் வீதம் த்ரவ்யராசியை உமக்குப் பரிசளிக்கச்சடவோமென்று ப்ரதிஜ்ஞை பண்ணுகிறேமிதனுல்"

என்று தெரிவித்திருக்கிருர்கள் அந்த மாத்வ மடாதிபதிகள். நாமும் (P. B. A.) இப்படி ப்ரதிஜ்ஞை பண்ணத்தடையில்லை. ஆனால் மடாதிபதிகளைப்போல் பொருட்குவியல் கொடுக்க சக்தியில்லை. அதற்கு பதிலாகப் பலநூற்றுக் கணக்கான தோப்பிக்கணம் ஸந்நிதி விதியில் போடத் தடையில்லை. ஸ்ரீ. D. ராமஸ்வாமி ஐயங்கார் தாம் எழுதியிருக்கிறதென்னு சார்ய தூஷணைகளைப் பண்டிதர்கள் முன்னிலையில் ருஜுப்படுத்தினல்.

(1) தேசிகர்காலத்தில் ஸ்ரீரங்கத்தில் ஆசார்யபதவியில் வாழ்ந்தவர்களுக்கு ஸ்ரீ பாஷ்ய பரிசயம் கிடையாது. (2) அந்த ஆசார்யர்களும் தச்சிஷ்யர்களும் தேசிகனைப் பல வகையாக ஹிம்ஸித்தார்கள். (3) ஆசார்ய ஹ்ருதயகாரர் பொருமைகொண்டு தேசிகனேடு போட்டியிட்டார். (4) திருவாய்மொழியின் வியாக்கியானங்களான 9, 12, 24, 36, ஆயிரப்படிகளிலுள்ள தோஷங்களை யெல்லாம் தேசிகர் களைந்துவிட்டார்.

என்று இவர் (D. R.) எழுதியுள்ள இந்த நான்கு தூஷணைகளை இவர் ஸமர்த்திக்க முன் வருவாரா? செ. கி. வ. என்றும், ஜபா, ஸ்ரீநி...என்றும் அபத்தக்கையொப்பங்களை அறவே விட்டொழித்து நேரான பெயருடன் நேர்மையாக விஷயம் சொல்லுவாரா?

ஸ்ரீ காஞ்சீ, P. B. அண்ணங்கராசாரியர். 3—9—1960.

ஸ்ரீ:

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ. ஸ்ரீ. அண்ணங்கராசாரியர் எழுதிய

# உபந்யாஸ விம்சதியின் முகவுரை.

1. ஞானச்சுடர் விளக்க மென்கிற புத்தகம் சில பல மாதங்கள் அஜ்ஞாத வாஸம் செய்து நாலு நாள் முன் வெகு பயத்துடன் தலை காட்டியிருக்கின்றது. ஆறு மாதகாலமாக (சே. கி. வ.) என்று அநாமதேய ப்ரத்யாம்நாயமான கையொப்பமிட்டு நிந்தைக் காகிதங்களை நித்தியமும் வெளியிட்டு வந்த பெரியார்கள் இப்போது ஒரு நபரை முன்னிற்க வைத்திருக்கிறுர்கள். அந்த நபரை அனைவரும் நன்கு அறிவர்களாதலால் இங்கு நாம் விவரிக்க விரும்புகின்றிலோம். ஷடிஆய-ஐ நிந்தையே வடிவெடுத்ததான அப்புத்தகம் சென்னை விநோதன் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டதாகக் கண்டபடியால் அந்த அச்சுக்கூடத்தின் ப்ரொப்ரைடர்க்கு நாம் 27—8—60 ல் கடிதமெழுதி உடனே பதில் தெரிவிக்கக் கோரியிருந்தோம். அதற்கு உடனே அவர்களிடமிருந்து கிடைத்த பதில் கடிதம் கீழ்வருமாறு;—

"28—8—60 ஸ்ரீமத் ஸ்வாமிகளுக்கு வணக்கம். தங்கள் கடிதம் கிடைத்தது. சென்ற தை மாதத்தில் நான் Bombay (பாம்பே) போயிருந்த காலத்தில் ஞானச்சுடர் விளக்க மென்கிற புத்தகம் இங்கே அச்சிடக் கொடுத்ததாக பிறகு எனக்குத் தெரிய வந்தது. நான் சென்னையில் இருந்திருந்தால் பெரியார்களைப்பற்றி வெகு நிந்தனையாக எழுதியிருக்கிற அப்புத்தகத்தை அச்சிட வாங்கிக் கொண்டிருக்கமாட்டேன். ஏதோ தவறுதலாக நடந்துவிட்டது. அதற்காக மன்னிக்கும்படி பிரார்த்திக்கிறேன். இப்புத்தகத்திற்கு ஆர்டர் கொடுத்தவர் திருவள்ளூர் வாஸியான P. K. ராமபத்ராசாரியார். அவருடைய ஆர்டர் கடிதத்தின் காபியும் இத்துடன் அனுப்பியிருக்கிறேன். 1960ஹு பிப்ரவரி மாதம் முதல் ஜுலை மாதம் வரை ஷை வேலை எமது அச்சுக்கூடத்தில் நடந்திருக்கிறது. அதில் எனக்கு யாதொரு சம்பந்தமும் இல்லையாதலால் தாங்கள் என்பால் எவ்வித குற்றமும் நினைக்கமாட்டீர்களென்று நம்புகிறேன்.

இப்படிக்கு,

சென்னை விநோதன் பிரஸ், ப்ரொப்ரைடர். R. ரங்கநாயகி".

ஷை லெட்டரில் கண்ட ஆர்டர் கடிதத்தின் காபி வருமாறு;—

திருவள்ளூர்,
15-2-60.

ஸ்ரீமான் உரிமையாளர் **விநோதன் பிரஸ்**, ஜோன்ஸ் தெரு, மதறாஸ், அவர்களுக்கு.

'ஞானச்சுடர் விளக்கு' என்னும் புஸ்தகத்தை 10pt எழுத்துகளில் D. Crown 8 பக்கங்கள் கொண்ட பாரம் 1-க்கு ரூ. 23 வீதம் (கம்போஸிங் & ஸ்ட்ரைகிங்) 500 காபிகள் அச்சிட்டுத் தரும்படி கோருகிறேன். இதற்காக Manuscript கொடுத்திருக்கிறேன். ஒருப்ரூப் அடியிற்கண்ட விலாசத்துக்கு அனுப்பித்தரும்படி கோருகிறேன்.

P. K. ராமபத்ராசாரியர்,
மானேஜர், ஸ்ரீ மாலோல பிரஸ்,
திருவள்ளூர், செங்கல்பட்டு ஜில்லா.

2. மேலே வெளியிட்ட கடிதங்களினுல் தேறுகின்ற உண்மைக்கு மாருக விவாதப் புத்தகத்தின் அட்டையில் 30-11-59 (அதாவது விகாரி ஹு கார்த்திகை மீ 14உ) அது அச்சிட்டு வெளியிடப்பட்டதாகக் காட்டியிருப்பது எதற்காக என்பதை அவரவர்கள் ஆராய்வது. இது 9, 10 மாதம் என்ன காரணத்தினுல் அஜ்ஞாதவாஸம் பண்ணிற்ரே?

3. திருவள்ளூர் மாலோலபிரஸ் மானேஜர் ராமபத்ராசாரியர் அச்சிடுவித்தவர்; அச்சிடுவதற்காக எழுதியனுப்பிய ஒரிஜனல் அவருடைய கையெழுத்தல்லவென்றும் வேப்பேரியில் ஒரு வக்கீல் எழுதியனுப்பியதென்றும் அச்சுக்கூடத் தொழிலாளர்களால் தெரியவந்தது. அதைப்பற்றி நமக்கு விசாரமில்லை. பெரிய பெரிய நபர்கள் இதில் தலையிட்டு விஷமங்கள் செய்து வருகிறபடியை அன்பர்களுக்குக் காட்டினோமித்தனை. இவர்கள் அச்சுக்கூடத்தில் ஆர்டர் கொடுத்ததே 15-2-60 (மாசிமாதத்தில்) என்பது விளங்கிற்று. 5, மாதகாலம் அச்சுவேலை நடந்திருக்கின்றது. நேற்று ஜூலை மாதத்தில்தான் முடிவடைந்தது. அதன் பிறகும் வெளியில் தலைகாட்ட அஞ்சி ஏகாந்த வாஸமே செய்துவந்தது. உண்மை இங்ஙனே யிருக்க, பத்துமாதங்களுக்கு முன்னமே இது அச்சிடப்பட்டு விட்டதாகக் காட்டியிருப்பது எதற்காகத் தெரியுமோ? இது பத்துமாதம் பங்கமடையாமல் ஜீவித்திருந்தது' என்று பொய்யான பெருமையைப் பேசிக்கொள்வதற்கென்றுணர்க. கம்ஸனால் திருவாய்ப்பாடிக்குப் போகவிடப்பட்ட 'தீப்பப்பூடுகள்' அங்கே சென்று தலைகாட்டுமளவும் இரண்டொரு நிமிஷம் ஜீவித்திருந்ததாக நாம் கதை கேட்டிருக்கிறோமேயொழிய வேறுவிதமாகக் கேட்டதில்லையே. 'கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான்' என்றால் அடுத்த பேச்சு என்ன? 'கனவிருளகன்றது' என்பது தானே. அதுபோல, ஒரு நாள் கூட ஜீவித்திருக்கமாட்டாத இவர்களது அபத்தக்களஞ்சியம் பத்துமாதங்கள் ஜீவித்திருந்ததென்றால் இதற்கு ஏதேனும் அர்த்தமுண்டோ?

4. அன்பர்களே! மற்றொரு காரணமும் மிக மிக முக்கியமாக உண்டு. அதாவது, நம்முடைய பிரபந்தஸாரதத்வஸாரம் தோன்றியது டிஸம்பர் மாதத்தில். ஸ்ரீரங்கத்து அத்யயநோத்ஸவ நிகழ்ச்சிகளைப்பற்றின பத்ரிகைகள்தோன்றினது ஜனவரி மாதத்தில். இப்படியிருக்க, இவர்கள் நவம்பர் மாதத்திலேயே இவ்வளவு கடுமையான தூஷணங்களைப் பொழிந்து விஷமங்கள் நிறைந்த இந்த அபத்தச் சுவடியை வெளியிடுவதற்கு ப்ரஸக்தியில்லை. பிரபந்த ஸாரதத்வ ஸாரத்தில் கண்ட விஷயங்களுக்கு பதில் சொல்லவேண்டியது இவர்களின் முக்கியமான கடமை. அதற்கு ஏன் இதில் ஒரு பதிலும் சொல்லவில்லை? என்று யாரேனும் கேட்டால், அது வெளிவருவதற்கு முன்னமே இது அச்சிட்டு முடிக்கப்பட்டதனால் பிறகு தோன்றிய அந்த நூலுக்கு முன்னாடி எப்படி பதில் சொல்லுவது? என்று லேசாகச் சொல்லிவிடுவதற்குச் செய்த சூது இது. தவிரவும், திருவள்ளூர் மாலோலப் பிரஸ் மானேஜர் இதைத் தமது அச்சுக்கூடத்தில் அச்சிடாமல் சென்னைக்கு அனுப்பவேண்டிய காரணமென்ன? வேப்பேரி வக்கீல் மாலோலப் பிரஸ்ஸிலேயே அச்சிடும்படி தமது அபத்தக் களஞ்சியத்தை எழுதியனுப்பினர். P. K. R. அஞ்சினர். ஏதேதோ செய்தார்....இத்தகைய விசாரங்கள் நமக்குச் சிறிதும் வேண்டாதவை. எழுதியவர் யாராயிருந்தாலும் அச்சிட்டவிடம் எதுவாயிருந்தாலும் அதில் நமக்குக் கண்ணோட்டமில்லை. பெரிய பெரிய நபர்கள் இதில் கேவலமான முறையில் தலையிட்டு வீணான சூதுகளை மிக மிகச் செய்திருக்கிறார்களென்பதை யாவருமறியவே இந்த விசாரங்களைச் சிறிது நடத்தினோம். இவர்கள் எத்தனை சூதுகள் தான் செய்யட்டுமே; இவர்களது வகுப்பில் மஹா மேதாவிகளாயும் மஹா பண்டிதர்களாயுமிருக்கிற ஸகல பேர்களுந்தான் ஒன்று கூடி, 56 பக்கமேயல்ல, 560 பக்கமும் வெளியிடட்டுமே. விஷயம் எங்கிருந்து வரப்போகிறது. இல்லாத விஷயம் எப்படி வர முடியும்? சுநகஸ்த்ரீமாலாஸஹஸ்ரிகளின்வயிற்றில் ஸிம்ஹமோ மஜமோ ஜனிக்க வழியேது?

5. சென்னையில் மிகவும்ப்ரக்க்யாதராயிருந்த (Late) ப்ரஹ்மஸ்ரீ. T. R. ராமசந்திரய்யரவர்களை அறியாதாரில்லை. அவர் வாயினல் சொல்லக் கேட்ட அவர் விஷயமொன்று கேண்மின்; அவர் மிகவும் பிராமாணிகராகையாலே தம் மனதில் 'இது தப்புக்கேஸ்' என்று பட்டுவிட்டால் லக்ஷம் ரூபாய் பீஸ் கிடைப்பதாயிருந்தாலும் அதை ஏற்றுக் கொள்ளமாட்டாராம். அப்படிப்பட்டவரிடத்தில் ஒருவர் முழுப் பொய்யான வ்யவஹாரமொன்றைக் கொணர்ந்து கொடுத்து இதைத் தாங்கள் நடத்தித் தரவேணுமென்று கோரினராம். அவர் ஆராய்ந்து பார்த்து இது சிறிதும் நியாயமில்லாதது என்று தெரிந்துகொண்டு மறுத்துவிட்டாராம். ஆனாலும் பிரபல தாக்ஷிண்ய நிர்ப்பந்தாதிகளினல் அதை அவசியம் ஏற்றுக் கொள்ள நேர்ந்துவிட்டதாம். ஆனாலும் 'ஒரே ஒரு நாள் ஒரு மணி காலம்மட்டும் ஜட்ஜ் முன்னிலையில் பேசுவேன்' என்றாராம். 'ஒரு மணி காலங்கூட வேண்டாம்; அரை மணி கால் மணி பேசினாலும் போதும், இந்த கேஸில் தங்களுடைய ஸம்பந்தமிருக்கிறதென்று ஜட்ஜ் தெரிந்து கொண்டால்போதும்' என்றார்களாம். ஒரு நாள், கேஸ் ஆர்க்யுமெண்டுக்கு வந்துவிட்டதாம். இவர் கட்டைத் தொட்டுப் பார்க்கவுமில்லையாம். அந்த கேஸில் நாற்பது பேர்கள் பிரதிவாதிகளாம். அவர்களுடைய பெயர்களை வாசிப்பதும், அவர்கள் இன்னவூர் இன்னதெரு, கதவிலக்கமின்னது, தகப்பனர் பெயர் இன்னது, வயது இன்னது, தொழில் இன்னது... என்று இதையெல்லாம் வாசிப்பதுமாயிருக்கிறாராம். மணியோ போய்க் கொண்டேயிருக்கிறது. ஜட்ஜ்க்கு விஷயம் புரிந்துவிட்டது. மேல் விஷயமிருக்கட்டும்.

6. அதே போல இவரை நிர்ப்பந்தித்து ஆளாக்கினர்கள். இவர்க்கோ விஷயங்களில் புகுந்து எழுத சக்தியில்லை. எதையாவது எழுதித் தொலைக்கவேண்டியதாயிற்று. க்ரந்த சர்ச்சையிலோ தேவாலய வ்யவஹார சர்ச்சையிலோ சிறிதும் ஸம்பந்தப்படாத வம்பு விஷயங்களையிட்டுச் சுவடியை நிரப்பிவிட்டார். ஞானச் சுடர்விளக்க மென்கிற இவரது சுவடியில், ஸம்பிரதாயத்தில் சர்ச்சிக்கப்பட்டுவருகிற விஷயங்களுக்கு எவ்விதத்திலும் ஸம்பந்தப்படாத கடைத்தெரு புராணங்களைத்தான் இவர் மிக மிக நிரப்பியுள்ளார். காட்டுகிறேன் பாருங்கள்; (பக்கம் 42ல்)

> "காஞ்சியில் மேட்டுப்பாளையத்தெருவில் சமீபகாலத்தில் பிரதிவாதிபயங்கரம் சின்னய்யாப்பிள்ளை நொண்டி ரங்காசாரியரென்று ஒருவரிருந்தார். அவர் க்ருஹஸ்தாச்ரமி; ஸ்ரீமத் உ. வே. ஜகத்குரு ப்ரதிவாதிபயங்கரம் காதி அனந்தாசாரியர் ஸ்வாமிக்கு அடித்தாறும் நிழலும்போல தான் என்று சொல்லிக்கொள்வர். ஸ்வாமி தேவிகளுக்கு தினமும் அரிசி பருப்பு படியளந்துகொண்டிருந்தவர். அனிபெஸண்டு அம்மையிடமும் மகாத்மா காந்தியிடமும் மிகவும் பக்தி பூண்டவர். கதர் உடுத்திக் காலம் கழித்தவர்."

இப்படியாகக் கந்தபுராணம் வரைந்துகொண்டு போகிறார். நொண்டியைப்பற்றி யெழுதினது நொண்டியே யென்று இவர்களது வகுப்பில் வார்த்தை.

பக்கம் 36ல் எழுதப்படுகிறது—

> "காஞ்சீ அழகிய மணவாள ஜீயர் மடம். இம்மடத்தில் விளங்கி இறந்த ஜீயர்கள் நால்வர்களைப் பற்றி யான் அறிந்தவாறு—ஷஷ்டி ஜீயர் ஸங்கீத ஜீயர். ஸப்தமி ஜீயர் சாப்பாட்டுக்கேயில்லாமல் திண்டாடிய ஜீயர். அஷ்டமீ ஜீயர்—இவர் அத்யாபக கோஷ்டியிலே வரவொட்டாமல் தடுக்கப்பட்ட ஜீயர். நவமி ஜீயர்—இவர் 4, 5 பெண்களோடு இருந்தும் தன்னை முடித்துக்கொண்ட ஜீயர். ஆண்டி எப்போது சாகப்போகிறான்? மடம் எப்போது காலியாகப்போகிறது? என்கிறார் எங்கள் எஜமானர் என்கிறார். இவருடைய அத்தேவாஸி யொருவர் போருளாளன் ஸன்னிதிக்கு ஸ்கீமினல் வந்த நிர்வாஹ அதிகாரியே. ஸ்கீம் ஒன்றும் போடாமலே மடத்துக்கு நிர்வாஹ அதிகாரியானது பற்றி ஆச்சரியப்படுகிறார் கூரம் நரசிங்கம்."

7. இப்படி ஒன்றுக்கொன்று ஸம்பந்தப்படாததும், விஷய விசாரங்களுக்கு வேண்டாததும், வாசிப்பவர்களுக்கு இன்னது என்று புரியாததுமான வம்பு விஷயங்களையே இப்புத்தகம் நிரம்பக் கொண்டிருக்கின்றது. மேலேகாட்டிய விதமான வீண்வம்பு விஷயங்களோடு நிற்காமல் மிகவும் அதிகப்ரஸங்கமான விஷயங்களிலும் தலையிட்டிருப்பது பெருத்த ஸாஹஸம். அவ்வதிகப்ரஸங்கங்களின் பலன் இவர்களுக்குக் கைமேலே காணலாகிறது. இங்கேயே காணலாம்.

8. ப்ரக்ருத அபத்தச் சுவடியில் (பக்கம் 4) முடிவில்—

"தேசிகனுடைய பிரபந்தங்களையும் ரஹஸ்யங்களையும் (P. B. A.) இவர் யாரிடம் காலக்ஷேபம் பண்ணினார்? இவர் அடிபணிந்ததாகச் சொல்வது காதிஸ்வாமி இடம். அந்த ஸ்வாமிக்கு ப்ரபந்த வாஸனையே கிடையாது. குளத்தைநாடிக் குளித்துவந்தவர். கடும் தவம் செய்தவர். மந்த்ர ஸித்திபெற்றவர்."

என்றெழுதியுள்ளது. P. B. A. யாரிடம் காலக்ஷேபம் பண்ணினார்? என்ற கேள்வியோடு நிறுத்தியிருக்கலாம். அதற்கு மேலும் எழுதவேண்டிய அவசியமிருந்தால் "இவர் தான் தோன்றியாகப் பார்த்தவர்; இவர் குருமுகமாகக் கேட்டவரல்லர். இவர்க்கு ஒரிழவும் தெரியாது. யதாஜாதர். ஸர்வஜ்ஞம்மந்யர்." என்று ஏடு ஏடாக எழுதி வைத்திருக்கலாம். ஸர்வஜ்ஞரென்று உலகம் போற்ற வெழுந்தருளியிருந்த ஸ்ரீ ராமாநுஜ புநரவதார பூதரான ஸ்ரீகாதிஸ்வாமியை அஸ்தானே ப்ரஸங்கித்து அவர்மீது குறைகூற முன்வந்தவர் யாரென்பது தெரியவேணுமே. இதைப்பற்றி மேலே விரிவாகச் சொல்லுவோம்.

9. ஸ்ரீகாதிஸ்வாமி திருமாளிகை விஷயமாகவே மற்றும் சில அதிக ப்ரஸங்க வார்த்தைகளைக் கொட்டியிருக்கிறது. அதாவது,

"காதிஸ்வாமி பரமபதித்தவுடனே பிரதிவாதி பயங்கரமடத்துக்கும் பிள்ளைக்கும் ஸம்பந்தமில்லையென்றதும், திருவத்யயனத்தன்று காதியின் பிள்ளையை பட்டாபிஷேகம் செய்யவராமல் ஒதுங்கியிருந்ததும் கோவர்த்தனம் ஸ்வாமியால் செய்விக்கப்பட்டு அங்கீகரிக்கப்பட்டதும்......அறியாதரார் யாரேனுமுண்டோ?" என்று.

உலகத்தவர்களே! இருபத்தைந்து வருஷங்களுக்கு முற்பட்ட செய்தியை நாம் எவ்வாறு எழுதினாலும் கேட்பாரார்? என்று நினைத்தும், தைரியமாக நாம் கைபோனபடி யெழுதி அச்சிட்டுவிட்டால் இதை இவரால் எப்படி மறுக்கமுடியும் என்றும் மூர்க்கத் துணிவுகொண்டு அஸம்பாவிதமானதை எழுதிவைத்திட்டால் உண்மையை நிரூபிக்க ஸர்வஸாக்ஷியான தெய்வம் இல்லையா? ஸ்ரீ ஸ்வாமியின் திருக்குமாரர்க்குப் பட்டாபிஷேகம் செய்வித்தகாலத்தில் சிஷ்யர்களால் எடுக்கப்பட்ட திருவுருவப்படம் இதோ திகழ்கின்றது காண்மின். இந்த பட்டாபிஷேகத்தை அருகேயிருந்து நடத்திவைத்தவர் யாரென்பதை உற்று நோக்குங்கள். கோவர்த்தனம் ஸ்வாமியென்று ஒருவரை அநவஸரமாக ப்ரஸங்கித்திருக்கிறாரே அவர் இந்த பட்டாபிஷேக கோஷ்டியில் தலைகாட்டியிருப்பதுண்டோ? என்பதையும் கவனியுங்கள். யதார்த்தஸ்திதியை கேவலம் துராக்ரஹத்தினால் சிலர் அபலபித்தால் யதார்த்தம் மறையுமோ?

10. இந்த உருவப்படமில்லையானாலுங்கூட ஸ்ரீ உ. வே. வித்வான். இளங்காடு ரங்காசாரியர் ஸ்வாமி போல்வார் உடனிருந்து அநுபவித்தவர்கள் உண்மையை ப்ரசாரம் செய்தே தீருவர்கள். அனேக ஸஜ்ஜநஸாக்ஷிகமாயும் ஸமீபகால ஸாஹஜிதமாயும் விபரீதவார்த்தைக்கு ஸர்வாத்மநா அநர்ஹமாயுமுள்ள இவ்விஷயத்திலேயே இவர்கள் அஸத்யத்திற்குச் சிறிதும் அஞ்சாமல் இப்படி யெழுதுகின்றார்களென்றால், சில நூற்றாண்டுகட்கு முன்பும் பல நூற்றாண்டுகட்கு முன்பும் நடந்த செய்திகளைப் பற்றி இவர்கள் எழுதுவன சிறிதும் மெய் கலவாத முழுப் பொய்களே யென்பதில் ஸந்தேஹிக்க ப்ரஸக்தியுண்டோ?



ஸ்ரீ காஞ்சீ ஜகத்குரு காதிஸ்வாமி ஸ்ரீநச்குமாரர் பட்டாபிஷேக மஹோத்ஸவக் காட்சி. 15—8—37.

11. மேலும் முக்கியமான வார்த்தை கேளீர். க்ராந்திக விஷயங்களுக்கும் ஸாம்ப்ரதாயிக ஸித்தாந்தங்களுக்கும் லவலேசமும் ஸம்பந்தப்படாத குடும்ப விஷயங்களை யெடுத்து ப்ரஸம்ஸிப்பதனால் இவர்களடைந்திருக்கிற ஸம்ஶயங்களுக்கும் பரிபவங்களுக்கும் பரிஹாரமாய் விடுமா? சதுச்சாஸ்த்ரபண்டிதராய் விளங்கின திருப்புட்குழியப்பாஸ்வாமி ஸ்வரூபக்ரந்த காலக்ஷேபத்திற்கு ஒருவர்காலில் வணங்கியாக வேண்டியிருந்தபடியாலே இந்த ப்ராந்தத்தில் ஒருவரையும் காணாமல் ஸ்ரீரங்கம் போய் ஒரு மடத்தில் இரண்டொருமாதம் வாய்மணக்க வயிறு சிறக்க போஜ்யாஸனம் கண்டருளி அங்கே சில ஸ்ரீ கோசங்களை அவிழ்த்துக் கட்டினதாக அபிநயித்து ஊர்வந்து சேர்ந்தார். இப்படியிருக்கையில் தமது திருக்குமாரரும் ப்ரசண்ட வித்வன்மணியுமான பட்டண்ணாஸ்வாமி புதுக்கோட்டை ஸம்ஸ்தானக்குப் புறப்பட்டார். அப்போது அவரைப் பார்த்து 'பிள்ளாய்! ஸ்ரீரங்கம் வழியாகத் தானே புதுக்கோட்டைக்குப் போகிறாய்; ஸ்ரீரங்கத்தில் ஸ்வாமியை ஸேவித்து ஸ்ரீஸூக்தி ஸ்வாத்யாபாரம் பண்ணிவா' என்று திருத்தகப்பனார் (அப்பா) நியமித்தாராம். இவரும் அப்படியே அங்குப் போக, அப்போது அங்கு ஏதோ காலக்ஷேபம் நடந்துகொண்டிருந்ததாம். பட்டண்ணாஸ்வாமிக்கு அங்கு பத்து நிமிஷத்திற்குமேல் காது கொடுத்திருக்கப் பிடிக்கவில்லையாம். 'இது என்ன அஸம்பத்தப்ரலாபமோ!' என்று சொல்லிக்கொண்டே போய்வருகிறேனென்று கூட சொல்லாமல் எழுந்துவந்து விட்டாராம். திரும்பி ஊர்வந்து சேர்ந்து திருமாளிகையில் புகும்போதே திருத்தகப்பனார் 'பையா! ஸ்வாமியை ஸேவித்தாயா? அநுக்ரஹிக்கப் பெற்றாயா? என்று கேட்க, பட்டண்ணாஸ்வாமி கையிலிருந்த மூட்டையைக் கீழே விட்டெறிந்து 'உம்மசாமியழகும் உம்மழகும் ஆலத்திவழிகிறது, போதுமே. நல்ல சாமியைத் தேடிப் பிடித்தீரே?' என்று தம் இரண்டு கைகளாலும் ஆலத்திவழித்தாராம். இது இளங்காடு ஸ்வாமி சொல்லக் கேட்டது. ப்ராக்ருத அபத்தச் சுவடிக்காரர்கள் தாங்கள் ஸ்ரீ காதிஸ்வாமி விஷயமாகச் சில கல்பனைப் பேச்சுக்களை யெழுதி என்றைக்கோ முடிந்துபோன ரகுநாத தாதாசாரியரையும் சாமா திருமலை தாதாசாரியரையும் தப்பு ஸாக்ஷியிடுகிறார்கள். உலகின் பாக்கியத்தினால் பாங்காக எழுந்தருளியிருக்கிற பெரியார்களையே நாம் ஸாக்ஷியிடுவது.

12. ஸ்ரீகாதி ஸ்வாமி இப்படிப்பட்ட ஆசார்யரல்லர். எந்த வித்யையிலும் * நபூதோ ந பவிஷ்யதி * என்னநின்ற நிஸ்ஸாமாந்யாதிஶயவைதுஷ்ய ஸார்வஜ்ஞ்யவைஶிஷ்ட்யர். ஸ்வாமி தம்முடைய மாதுலர்கள் நால்வரில் மூவரிடத்தில் ஸகல வித்யைகளையும் க்ரஹித்தவர். அம்மூவரில் ஒருவரான குட்டி ஸ்வாமியென்று ப்ரஸித்தரான மஹா ஸ்வாமியை (Bombay) கல்யாணி நகரத்தில் எழுந்தருளப்பண்ணி வைத்து அவர் திருவடிகளிலே ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் யாவற்றையும் முறைவழுவாது அதிகரித்தவர். ஸ்ரீ ஸ்வாமியின் தனியனிலும் இது விளங்க நின்றது. அவ்விஷயம் எப்படியாவதிருக்கட்டும். அந்த மஹா ஸ்வாமியைப் பற்றிக் குறைகூறியிருக்கிற பேர்வழி இன்னாரென்று வெளிவர வேண்டாவோ? அச்சுக்கூடங்களில் யார் எதை யெழுதிக்கொடுத்தாலும் அச்சாகி வெளிவந்துவிடும். மை படியமாட்டேனென்னாது; காகிதம் தாங்கமாட்டேனென்னாது. உண்மையான நபர் வெளிவருக.

13. விஷயங்களுக்கு ஏற்றம் வக்தாவாலே. வக்தா துச்சனாயிருந்தால் விஷயங்களும் துச்சமாமென்பது சொல்லவும் வேணுமோ? விவாதச் சுவடியில் தலைகாலில்லாமல் அனேக விஷயங்களில் ப்ரஸங்கம் செய்யப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்றும் இருளினாலும் மருளினாலுமேயானது. இப்படி நாம் வாய்ப்பேச்சாக எழுதிவிடுவதன்று. ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றாவிடில் பராஜிதனானே னென்று உத்கோஷித்துக் கொண்டு வீதியார வலம்

வருவேன் என்று சபதம் செய்து முன்னிற்பேன். இந்த சபதத்தை நான் யாரை நோக்கிச் செய்வது? ராமபத்ராசாரியோ ராமசாமியோ மற்றொருவரோ "இந்த விஷயங்களை நான் தானெழுதினேன்; இவற்றின்மேல் மறுப்பு வந்தால் முன்னின்று நான் விடையிறுக்கக் கடவேன்; இல்லையேல்....இன்னது செய்யக்கடவேன்" என்று ப்ரதிஜ்ஞை செய்து துணிந்து வெளி வந்தாலன்றோ இவர்களெழுதும் விஷயங்களின் வீறு தெரியவரும். விவாதச் சுவடி யில் (32, 36 பக்கங்களில்) நாமறிந்த வரலாறு என்றெழுதப்படுகிறது. காஞ்சீ அழகிய மணவாள ஜீயர் மடாதிபதிகளின் வரலாறுகளெல்லாம் தாமறிந்தவையென்று கூசாமலெழுது கிறார். நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன் பரமபதித்த மஹநீயர்களின் வரலாறுகளை அறிந்து உள்ளபடி யெழுதுவதாகச் சொல்லுகிற நபர் யாவர்? என்பது உலகுக்குத் தெரிய வேண்டாவோ? மாளிகைக்குள்ளே கல்லையும் சட்டியையுமெறிந்துவிட்டு ஓடியொளிக்கிற சிறு பயல்களைப் போல ஒளித்து வளர்கின்ற சில்லரைகள் தெரிவிக்கின்ற அற்ப விஷயங்கள் அல்பர்களுக்கேயன்றோ ஆதரணீயங்கள். அயோக்யத்தனமான செய்கைகளன்றோ இவை!

14. இப்போது நாம் வெளியிடுகிற உபந்யாஸ விம்ஸதியில் இருபது உபந்யாஸங்க ளென்று பேரேயொழிய இருநூறு விஷயங்களிருக்கின்றன. இரண்டாயிரம் விஷயங் களுமிருக்கின்றன. அத்தனையும் விவாதச் சுவடிக்கு ப்ரத்யக்ஷ கண்டனங்கள். "இவற் றுக்கு இதோ நான் மறுப்பெழுதுகிறேன்" என்று உண்மைப் பண்டிதரொருவர் வெளி வரட்டுமே, ஈகை. வே. D. T. T. முதலானோர் பட்டபாடுபடட்டுமே. ஆறு மாதங்களுக்கு முன்பு பரமபதித்த ஸ்ரீமத்பரமஹம்ஸ. குணக்கரப்பாக்கம் ஜீயர் ஸ்வாமியையும் அவர்க்கு முன்னமே போய்ச் சேர்ந்த திருக்குடந்தை இளையவில்லி ஸ்ரீநிவாஸாசாரியரையும் ஜீவித் திருப்பதாகவே காட்டியெழுதியிருக்கு மிச்சுவடியில் இவைபோன்ற அஸங்கதங்களே மலிந் துள்ளன. அவையெல்லாம் இந்த ஸஞ்சிகையில் கிள்ளிக்களையப்படுகின்றன.

15. இதில் சேர்ந்து வெளிவருகின்ற மெய்ஞ்ஞான மேன்மை விளக்க நூல் ஸ்ரீ உ. வே. பண்டித. A. M கண்ணன் ராகவாசாரியர் எழுதியதாயினும் அது நம்முடைய பல உபந்யாஸங்களையும் பல வியாஸங்களையும் மூலாதாரமாகக் கொண்டே யெழுதப்பட்ட தாதலால் அவற்றிலுள்ள விஷயங்களுக்கும் நாம் ப்ரதிஹவாக நிற்கத் தட்டில்லை. சிறிய விஷயங்களோடு பெரிய விஷயங்களோடு வாசியற எல்லாவற்றிலும் இவர்களுக்கு ஈநாயா ஹரணமேயொழிய ஒன்றில்கூட யதாஹரணம் கிடையாதென்பதை இதோ சிறிது காட்டுகிறேன். பக்கம் 30ல்) "பரகால்மடத்து யதிபதியின் விஷயம்" என மகுடமிட்டு

"மைஸூர் மஹாராஜாக்களில் ஒருவர் திரு நாராயணனை ஸேவிக்கப் போனதாகவும் அங்கே ஒரு ஜீயர் ஸ்வாமியிடம் பகவத் விஷயம் கேட்டதாகவும் அப்போது அந்த ராஜா பகவத் விஷயத்தில் சுவைகண்டு தம்மாசார்யரான பரகால மடத்து யதிபதிகளை திரு நாராயணபுரம் ஜீயரிடம் அழைத்துப்போய் அந்த ஜீயரிடம் காலக்ஷேபம் கேட்கச் சொன்னதாகவும் எழுதுகிறார்."

என்று அநுவாதம் செய்யப்பட்டுள்ளது. இவ்விஷயத்தை பூர்வ க்ரந்தத்திலிருந்து நாம் தவிர வேறு யாரும் எழுதினது கிடையாது. நாம் இப்படி யெழுதியிருக்கவில்லை. 1–1–54ல் வெளி யிட்ட ராமாநுஜ தயாபாத்ரபத்ய சரித்திரத்தில் (பக்கம் 6. பாரா 10 ல்.)

"ஏறக்குறைய 200 வருஷங்களுக்கு முன்பிருந்த மைஸூர் மஹாராஜா வொருவர் ஸதா ஸத்காலக்ஷேபமே பண்ணிக்கொண்டிருக்க விரும்பி திரு நாராயணபுரத்திலிருந்து ஒரு

தென்கலை ஜீயர் ஸ்வாமியைத் தம்முடைய அரண்மனைக்கு வரவழைத்து அவரிடத்தில் காலை வேளைகளில் பகவத் விஷய காலக்ஷேபம் செய்து வந்தார்."

என்றெழுதியிருக்கிறேன். மைஸூர் அரசன் திருநாராயணபுரம் சென்றதான ப்ரஸ்தாவமே கிடையாது. இதற்கு மேலே, (அடுத்த 7வது பக்கத்திலே அந்த பாராவிலேயே) நாம் எழுதியிருப்பதாவது,

"தன்னிடத்தில் ஸ்ரீராமாயண ப்ரவசநம் செய்து வந்த பரகால ஸ்வாமியை தினப்படி காலை வேளைகளில் நடக்கும் பகவத் விஷய காலக்ஷேப கோஷ்டிக்கு வரச்செய்தார். இவரும் போயிருந்து கேட்ட வளவில் நித்யமும் வந்து கேட்க வேணுமென்று ஆசையுண்டாகி அப்படியே பல நாள் வந்து கேட்டார்"

என்றே யெழுதியிருப்பது. அஸம்பத்த விவாதச் சுவடி எழுதியிருப்பதோ நேர் விபரீதம்.

"மைஸூர் ராஜா பரகால ஸ்வாமியைத் திருநாராயணபுரத்து ஜீயரிடம் அழைத்துப் போய் அந்த ஜீயரிடம் காலக்ஷேபம் கேட்கச் சொன்னதாகவும் எழுதுகிறார்."

என்று விபரீதமாக அநுவதிக்கப்பட்டிருக்கின்றது. ஒரு பெரிய ப்ரபு ஒரு யதியை மற்றொரு யதியிடம்போய் ஆச்ரயிக்கும்படி சொல்லுவரா? ப்ரவசந கோஷ்டிக்கு எழுந்தருள வேணுமென்று ப்ரார்த்திப்பதில் அவத்யமில்லாமையாலே அது செய்தார். நடந்தது நடந்த படியே நாமெழுதியிருக்க, அதை மிகத் தவருக அநுவாதம் செய்வது யோக்ய க்ருத்யமாகுமா? இதை நாம் தமிழில் மட்டுமெழுதியிருக்கவில்லை. இதை அப்படியே ஸம்ஸ்க்ருத பாஷையில் மொழி பெயர்த்தும் 44 பக்கம் அச்சிட்டிருக்கிறோம். இவற்றை ஆங்கிலத்திலும் மொழி பெயர்ப்பித்து 58 பக்கம் வெளியிட்டிருக்கிறோம். அதிலும் பக்கம் 8 பாரா 10-ல் மிக விரிவாக எழுதியிருப்பவற்றைக் காண்க. ஒன்றிலுமில்லாத விஷயங்களை இவர்களாகக் கயிறு திரித்து எழுதுவதில் பாமர ப்ரதாரணங்கூடத் தேருதே.

16. மற்றொரு மதிமயக்கமும் காண்மின். "ஈடு காலக்ஷேபம் செய்தாரென்று எழுத P. B. A. மறந்துவிட்டார்" என்று ஏசுகிறார்களிவர்கள். உள்ளது உள்ளபடியே யெழுதுகிற நாம் எதையும் மறக்கமாட்டோம். இவர்கள் திருத்தும்படியான நிலையில் நாம் அணுவளவும் எழுதமாட்டோ மென்பதை D. R. ஒருவரே நன்கறிந்தவர். "ஸஹாநாஜ: யாத்வாதி திவஸே ஶ்ரீமத்யதீந்த்ரமஹிதம் ஸ்வாவஸதா நாயஸ்ய, ஹரவிஷய நாத ஶ்ரீமதீஸ்ய ஸஹஸ்ரகீதி வ்யாக்யாநஸ்ய ஶ்ராவணோத்தரஸாமயிக ப்ரவசநஸ்ய ஶ்ரோத்ருஷ்வந்யதமோ ஜாயதே ஸ்ம பரகால ஸ்வாமீ." என்று நிஸ்ஸந்தேஹமாக எழுதியிருக்கிறோம். உள்ளவற்றைக் காணுதொழிவதும் இல்லாதவற்றைக் காண்பதுமே இவர்களின் படியென்பது விளங்கிற்று. தேசிகன் "ஸதோ வஸ்துதி, ஸதோபி நைவ வஸ்துதி" என்று மோஹாஞ்ஜன மஹிமையை ஸாதித்திருப்பது இவர்களிடமே பொருந்துமாயிற்று.

17. இங்கு முக்கியமான விஷயம். மைஸூர் மஹாராஜர்க்குப் பரகால ஸ்வாமி ஆசார்யரென்று இந்த ப்ரகரணங்களில் நாம் லவலேசமும் எழுதியிருக்கவில்லை. அந்த காலத்தில் ராஜாவுக்கும் மடத்திற்கும் யாதொரு ஸம்பந்தமும் ஏற்படவுமில்லை. இதை வர்த்தமாந மடாதிபதி ஸ்வாமி அபலாபமின்றிக்கே உள்ளபடி ஸாதிப்பதும் வழக்கம். அந்த மடத்தின் சரித்திரம் இவர்களுக்கு ஈஷத்தும் தெரியாது. "அந்த ராஜா தம் ஆசார்யரான பரகால மடாதிபதியை" என்று இவர்களாக எழுதிக்கொள்வதும் அதை நம்முடைய

வாக்காக அநுவதிப்பதும் பெருமோசம். நமது ஆங்கிலப்பதிப்பிலுள்ள ஒரு சிறு பகுதியை மட்டும் இங்கு அப்படியே உதாஹரிக்கிறோம், இவர்களின் வஞ்சனைகள் விளங்குதற்கு.

"About 200 years ago the Maharaja of Mysore of the time desiring to spend his time always in Godly Pravachanas, invited a Thenkalai Jeer Swami from Melkote and was listening to his discourses in the mornings on Eedu i. e. Tamil Veda meanings. One Vadakalai Sanyasi, Periya Parakalaswami who was staying in Mysore itself was going to the Maharaja in the evenings and was giving the Pravachana on Ramayana and other Ithihasas and Puranas. Finding that this Vadakalai Sanyasi, (Peria Parakalaswami,) had no acquaintance in Tamil Veda, the Maharaja thonght that it would be good for this erudite scholar of a Sanyasi to acquire the wealth of Tamil Veda knowledge and requested him to attend the morning discourses in Tamil Veda that were held daily in order to create an interest in him. After listening to a few lectures, the Sanyasi also felt a desire to listen to the same daily and accordingly he heard for many days."

18. ஈட்டிக்குப் போட்டியாக எதையாவது எழுதிவைப்போமென்றும், நம்புகிறவர்கள் நம்பி விடட்டுமேயென்று மெண்ணி இவர்கள் கைபோனபடி யெழுதுவதை நமது காலத்திற்குப் பிறகு வைத்துக் கொண்டால், ஏதோ சில மூலைகளிலாவது பலன் காணலாமிவர்கள். இப்போது இவர்களெழுதுகிற விபரீதமெல்லாம் உடனுக்குடனே ப்ரமாண புஷ்கலமாக யதார்த்தம் வெளிவருவதற்கே ஹேதுவாமென்பதைக் கைமேலே காண்கிறீர்களன்றோ.

19. இங்கே இவர்கள் மற்றொன்று மெழுதுகிறார்கள்—"அந்த தென்கலை ஜீயர் சொல்லும் பகவத் விஷயத்தை ராஜா கேட்டு வந்து விருத்தமான அந்த அர்த்தங்களைக் கண்டிக்கும்படி ஸ்வாசார்யரான பரகாலயதிகளுக்குச் சொல்ல அவரும் அப்படியே கண்டனம் செய்துவிட்டார்" என்று. இதனால், அந்த மைஸூர் மஹாராஜர் தென்கலை ஜீயரிடம் பகவத் விஷய காலக்ஷேபம் கேட்டது நிஸ்ஸந்தேஹமாகவுண்டு என்று இவர்களே ஸ்தாபித்து வைத்ததுதான் தேறி நின்றது. அந்த பரகாலயதிகளின் திருவாய்மொழி வியாக்கியானமோ தமிழிலும் தெலுங்கிலும் அச்சேறியுள்ளது. அதில் "[illegible]......[illegible]......[illegible]" என்று முகப்பில் தாம் ப்ரதிஜ்ஞை செய்தபடியே [அதாவது ஈட்டிலுள்ள இன்சுவைமிக்க அர்த்தங்களைப் பரிக்ரஹித்து, அந்த ஈட்டின் சுருக்கமென்னும்படியாகவே நான் வியாக்கியான மெழுதுகிறேன் என்று ப்ரதிஜ்ஞை செய்தபடியே] ஈட்டிலுள்ள பங்க்திகளையே அப்படியப்படியே வைத்து எழுதி முடித்திருக்கிறார். ஈட்டுக்குக் கண்டன மெழுதுபவராயிருந்தால் கண்டனமெழுதுகிறேன் என்றன்றோ ப்ரதிஜ்ஞை பண்ணுவர். ஈட்டிலுள்ள ஸ்வாரஸ்யமான அர்த்தங்களை அப்படியப்படியே கொள்ளுகிறேனென்று ப்ரதிஜ்ஞை பண்ணி அப்படியே தலைக்கட்டினவரை ஈட்டுக்குக் கண்டன மெழுதியவராக ப்ரசாரம் பண்ணி ஆனந்திக்குமிவர் யாராயிருக்கவேணுமென்று ஆலோசிக்குமளவில், "தேசிகன் நிகமபரிமளமென்று மிக விஸ்தாரமான வியாக்கியானம் திருவாய்மொழிக்கு

ஸாதித்து ஆறுயிரப்படிக்குப் பின் தோன்றிய வியாக்கியானங்களிலுள்ள அபார்த்தங்களை யெல்லாம் களைந்துவிட்டார்" என்றெழுதி ஸூத்ரகாரஸநகீரவகு நிற்கிறுரே யொருவர் அவரேயாக இருக்கவேணுமென்று நிர்ணயிக்கத் தட்டுண்டோ?

20. முக்கியமான சில வார்த்தைகளை யெழுதி இவ்விஷயத்தை முடிக்கிறேன். திருநாராயணபுரம் ஜீயர்—பரகால ஜீயர்...என்றுள்ள இவ்விஷயங்களை நாமெழுதி வெளியிட்டது 1954 ல். அதை அப்போதே கடாக்ஷித்தருளின ஸ்ரீ பரகால மடாதிபதிகள், தம்முடைய ஸ்ரீ கார்ய துரந்தரரும் கீர்த்தி மூர்த்தியான கஸ்தூரி ரங்காசார்ய ஸ்வாமியின் திருக்குமாரருமான கஸ்தூரி ஸ்வாமியைக் கொண்டு 4, 5 காகிதங்கொண்ட வொரு பதிலை ஸம்ஸ்க்ருதத்தில் வெளியிடுவிக்க, அடுத்த நாளே திருநாராயணபுரம் ஸ்ரீ ஸம்பத்குமாராசார்ய ஸ்வாமியால் அதற்குபதில் ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் தனித்தனியாக 50 பக்கம் வெளிவந்திருக்கிறது.

21. கஸ்தூரி ஸ்வாமி எழுதியிருந்ததாவது,

"தேசிக ஸம்ப்ரதாயஸ்தர்களான ராஜாக்கள் இதர ஸம்ப்ரதாயஸ்தர்களிடத்தில் காலக்ஷேபம் செய்தார்களென்பதற்கு நம்பத்தகுந்த ப்ரமாண மொன்றும் காணவில்லை"

என்று. இதன்மேல் ப்ரதிஷ்டாக்ரந்தத்தில் (7–5–1954ல்) பக்கம் 32 முதல் 40 to 44 பாராக்களில் வெளிவந்துள்ள பதில் சிறிது விரிவாக இருந்தாலும் அத்யாவச்யகமாதலால் அப்படியே ஈண்டு வெளியிடப்படுகிறது;

"ஒரு ஸம்ப்ரதாயத்தவர்கள் மற்றொரு ஸம்ப்ரதாயஸ்தர்களிடத்திலே காலக்ஷேபம் கேட்பதென்கிற விஷயம் விவாதங்கள் முற்றின இக்காலத்திலுங்கூட ப்ராஹ்மணோத்தமர்களிடத்திலும் காணப்படாநின்றது; தென்கலையார் வடகலையாரிடத்திலும், வடகலையார் தென்கலையாரிடத்திலும், உபயவேதாந்தங்களும் அதிகரிப்பது நாலைக்கும் எங்குங்கண்ட விஷயம். ராஜாக்கள் "ப்ரஜா: ஸர்வே ஹ்யுபஜீவந்தி" என்று ஹேதுஹரி சொன்ன நிலைமையை விட்டு நீங்கி விஷயங்கள் கேட்பதென்று வந்தால் ஸ்மார்த்த மாத்வாதிகளிடத்திலும் கேட்கிறார்கள்; கிம் புநஸ்தா? அப்ராஹ்மணர்களிடத்திலும் கேட்கிறார்கள். இது ப்ரத்யக்ஷ லக்ஷியமானதே. ஆகவே, ஆக்ரஹமோ விவாதமோ ஏதுவும் தோன்றாமலிருந்த 250 வருஷங்களுக்கு முற்பட்ட காலத்திலே மைஸூர் ராஜா திருநாராயணபுரம் ஜீயர் ஸ்வாமியிடத்தில் பகவத் விஷயம் கேட்டதற்காக இப்போது இவர் பொருமைப்படுவது பயனற்றது. சண்டைக்கு பீஜாவாபம் செய்த பெரிய பரகால ஸ்வாமியே அந்த ஜீயர் ஸ்வாமியிடத்தில் ஈடு காலக்ஷேபம் செய்தாரென்பது அசைக்க முடியாமலிருக்கிறதே. இல்லையாகில் "வ்யாக்யாநம் சடவைரி ஸூரிவசஸாம் யத்தாக்ஷிணாத்யை: க்ருதம்...ஸ்வாரஸ்யம் பரிக்ருஹ்ய தத்கதம்" என்று தமது பதினெண்ணாயிரப்படியின் உபக்ரமத்தில் ச்லோக மிடமாட்டாரே. ஸ்ரீ பரகால மடத்திலிருந்து வெளியிடப்பட்டிருக்கிற அபத்த பஞ்சாங்கங்களில் தலையான குருபரம்பரா ப்ரபாவத்தின் முகவுரையில் சிறிதும் அவசியமல்லாதபடி வானமாமலை ஸ்வாமியை ப்ரஸ்தாவித்து "வானமாமலை ஸ்வாமியானவர் ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஸ்வாமி திருவடிகளான புருஷோத்தம தேசிகரென்கிற கிடாம்பி நயினர் திருவடிகளான மணவாள மாமுனிகள் திருவடிகளை ஆச்ரயித்தவர்" என்று எழுதப்பட்டிருக்கிறது. அதற்கு முன்னே அஹோபிலம் ஆதிவண் சடகோப ஸ்வாமியும் ப்ரஹ்மதந்த்ர ஸ்வாமியின் சிஷ்யருடைய சிஷ்யரென்று எழுதப்பட்டிருக்கிறது. இதன்படி ஸ்ரீ வைஷ்ணவ வுலகமெல்லாம் தேசிக ஸம்ப்ரதாயஸ்தமே யென்று பரகால மடத்தின் கொள்கையாகத் தேறுவதால் இதர ஸம்ப்ரதாயஸ்தரென்கைக்கு ஹேதுவேயில்லையே. மிக முக்கியமாக ஒரு விஷயம். மைஸூர் ராஜாக்கள்

பரம்பரையாகவே தென்னாசார்ய உபய ப்ரவணர்கள்; ஆனதுபற்றியே அரண்மனையிலுள்ள ஸன்னிதியில் தென்னாசார்ய ஸம்ப்ரதாயம் நாளைக்கும் தழைத்தோங்கி வருகிறது. அங்கே மணவாள மாமுனிகளின் திருநக்ஷத்ரோத்ஸவ பரிபாலனத்தை நாளைக்கும் ஸ்ரீபரகால ஸ்வாமி நேரே யெழுந்தருளி யிருந்து அநுபவிக்க ப்ராப்தமாகின்றதன்றோ. கஸ்தூரி ஸ்வாமியின் சுவடியின் முடிவில் (ப்ரகாசயிஷ்யந்தே) என்றது பொய்யாகாமல் மெய்யான பிறகு அபரிமித மான தத்வார்த்தங்கள் வெளிவரப் போகின்றன. அந்த நன்னாளை ஸாத்விக வுலகம் ஆனந்தத்தோடு எதிர்பார்த்திருக்கவேணும். முடிவில் ஒரே வார்த்தை. பாத்ரபத்ய சரித்திரத்தில் (ஸம்ஸ்க்ருதத்திலும் தமிழிலும் பாரா-13-ல்) கோவில்களில் பாத்ரவிவாதத்தை விலைத்த பெரிய பரகால ஸ்வாமி தெற்கே யாத்திரை புறப்படும்போது 70, 80 தேசிக விக்ரஹங்களைச் செய்வித்து எடுத்துக் கொண்டுபோய் ஆங்காங்கு திவ்ய தேசங்களில் பிரதிஷ்டை செய்வித்தாரென்று இவருடைய சரித்திரத்தில் இப்போதுள்ள ஸ்ரீபரகால ஸ்வாமி பிரசுரம் செய்திருப்பதாக எழுதப்பட்டிருக்கிறது. அவ்விஷயத்தை வர்த்தமான பரகால ஸ்வாமியின் வைபவ ஸங்க்ரஹத்திலும் உலகமெல்லாம் வாசிக்கிறது. இதனால் அந்த பரகால ஸ்வாமியின் காலத்திற்கு முன்னே தென்னாட்டில் ஒரு ஸன்னிதியிலும் தேசிக விக்ரஹமேகிடையாதென்று தேறிநிற்கிறது. அது வாஸ்தவந்தானோ? என்பதுபற்றிப் பலர்க்கும் ஜிஜ்ஞாஸையுண்டு. (ப்ரகாசயிஷ்யந்தே) என்று கஸ்தூரி ஸ்வாமி யெழுதியிருக்கிறபடி வெளிவரப்போகிற நூலில் இதைப்பற்றியும் உண்மை தெரிவிக்க ப்ரார்த்தித்து நிற்கிறோம்." என்றெழுதியுள்ளது.

இந்த பதிலுரையைக் கடாக்ஷித்தருளின ஸ்ரீ பரகால மடாதிபதிகள் ஓராமாணிக ராகையாலே தெளிவு பெற்று விச்ராந்தராயருளினார். இது முடிந்து ஆறு வருஷமானபடியால் உலகுக்கு மறந்திருக்குமென்று இப்போது இதை வீணாகக்கிளப்பி, இப்படிப்பட்ட வம்பு விஷயங்களையிட்டே. 56 பக்கம் கணக்கு செய்திருக்கிறார்கள்.

இப்போது நாம் எழுதிவருகிறவிது அடுத்துள்ள நமது நூலுக்கு முகவுரையே யல்லது நூலன்று; நூலில், பெரிய விஷயங்களில் இவர்களது மருளுமிருளும் மாய்க்கப்படுகின்றன. இம் முகவுரையைச் சுருக்கமாகவே யெழுத நினைத்தோம். வளர்ந்து செல்லுகின்றது. அதனாலென்ன? அநாமதேயச் சுவடியின் அழுக்குகளையும் இழுக்குகளையும் எங்கே காட்டினாலென்ன? அந்தச் சுவடியில் இடையிடையேயுள்ள அவத்யங்களை யெடுத்துக்காட்டினோமிப்போது. அதன் உபக்ரமமே மிக மிக நீசமானது. அதைப்பற்றிச் சில காட்டுவோம்.

தன்னளவறியாமல் அஸப்யமாக எழுதியுள்ளவற்றை, அன்பர்களே! அலசியலசியுதறித்தள்ளுவோம். "இவருடைய விடமங்களைப் பலருமறிவர்" என்பது ஆரம்பவாக்கியம். இது மிகவும் உண்மையே. நம்மாழ்வார் *. மாயாவாமனனில் * இவை யென்ன விடமங்களே! * என்று ஈடுபடுகிறார். அப்படி உலகமெல்லாம் ஈடுபடத்தக்க விடமங்களே நம்முடையவை. தாதாசாரிகளிடம் எமக்குள்ள சீற்றம் அளவிடற்பாலதென்று எழுதுகிறார். இதற்கு அளவிடமுடியாததென்று பொருள் போலும். ஒருபடிப்பு மில்லாமல் நூலெழுதப் புறப்பட்டால் இந்த மதிதானேயாகும். உண்மையில் தாதாசாரிகள்மீது யாருக்குச் சீற்றமென்பதை உலகமறியக் காட்டுகின்றேன். ஜஸ்டிஸ் மன்றோதுரை அவர்களும், ஜஸ்டிஸ் அப்துல்ரஹிம் அவர்களும் சேர்ந்து எழுதிய ஸ்ரீ பெரும்பூதூர் ஜட்ஜ்மெண்டில் (Second Civil Appeals Nos. 952 to 955 of 1905. ஜட்ஜ்மெண்டு தேதி 4–11–1908. அய்யா ரகுநாத தாதாசாரி முதலானோர் அப்பீல் வாதிகள்; ஸ்ரீ பெரும்பூதூர் எதிராஜ ஜீயர் பிரதிவாதி.)

"We may observe here that the apparent origin of the dispute which to the dispossession of thathacharia is that they wrongly insisted on introducing the Vadagalai mantram into certain rituals instead of the Thengalai mantram." என்றெழுதப்பட்டிருக்கிறது.

[இதன் பொருள்;— சில சடங்குகளில் தென்கலை மந்திரத்திற்கு பதிலாக வடகலை மந்திரத்தைத் தவறுதலாய்ப் புகுத்துவதில் வீம்பு கொண்டார்கள் தாதாசாரிகள்—என்பது தான் அவர்கள் தங்கள் பாத்யதையை இழப்பதற்கு முடிந்த இந்த சண்டைக்கு மூல காரணம் என்பதாம்.] தாதாசாரிகள் என்றைக்கு மணவாளமாமுனிகளிடத்தில் த்ரோஹ புத்திகொண்டு விடமச் செயல் செய்யத் தொடங்கினர்களோ, அன்று முதல்கவே இவர் களின் கௌரவம் தலைமடியத் தொடங்கிற்று என்பது இதன் ஸாரமான கருத்து. இப்படி யெழுதின ஜட்ஜ்களுக்கு சிற்றமா? P. B. A. க்கு சிற்றமா? என்று ஒவ்வொருவரும் பார்க்கவேணும். தாதாசாரிகள்மேல் நமக்கு உள்ள சீற்றம் அளவிடற்பாலது; ஜட்ஜ் களுக்குள்ள சிற்றம் அளவிடமுடியாதது என்று தேறிற்ருகும். இதை இவர்கள் மறுக்க வேணுமானல் எளிதாக ஒரு வழியுண்டு. ஜஸ்டிஸ் மன்ரோ துரையும் அப்துல்ரஹீம் அவர் களும் சேர்ந்து எழுதிய ஜட்ஜ்மெண்டில் தாதாசாரிகளுக்கு இவ்விதமான மண்டவப்படி செய்யப்பட்டிருக்க, ஜஸ்டிஸ் V. கிருஷ்ணஸாமி ஐயர் ஜட்ஜ்மெண்டில் இப்படியிருப்பதாக ஜட்ஜ்பெயர் மாருட்டமாய் எழுதினது மருள் என்று மறுக்கலாம். இதனுல் இவ்விஷயத்தைக் கண்டனம் செய்துவிட்டோ மென்றும் களிக்கலாமிவர்கள். ஜயித்துவிட்டீர்களென்று நாமும் முதுகைத் தட்டிக் கொடுப்போம். இவர்களும் வெற்றிக்குணலமாடித் திரியலாம்.

விவாதச் சுவடியில் முதல் பக்கத்தில் "ஸ்ரீ. உ. வே. ஆசால் ராகவாசாரியர் ஸ்வாமி........சின்ன பிள்ளைலோகமையங்கார்....மூலை திருவேங்கடாச்சார் ஸ்வாமி...பச்சை வண்ணர் ஸன்னிதி ஈச்சம்பாடி நரஸிம்ஹாசாரியர்...நாட்டப்பனையங்கார் பென் பெந்தம் மாள்....திருமலை விஞ்சிமூர் பாஷ்யகாராசாரியர் என்று ஐந்தாறு திருநாமங்களை யெடுத்து அவர்களுக்குக் கஷ்ட ஸ்திதிகள் நேரிட்டதாகக் காட்டி இதற்கெல்லாம் என்ன காரண மென்று கேட்கிருர்கள். மேலே குறிக்கப்பட்ட வ்யக்திகளுக்கு மணவாளமாமுனிகளிடத் தில் விசேஷபக்தியிருந்தும் கிலேசங்கள் ஸம்பவிப்பானேன்? என்றுகேட்கிற பாவனை காட்டு கிருர்கள். இவர்களுக்கு தேசிக த்வேஷத்தினுல்தான் கிலேசங்கள் நேர்ந்தனவென்று எண்ணுகிருர்கள். இங்கு நாம் விஷயங்களை விவரித்தே விளக்குகிறோம்.

1955ஆம் வருடத்தில் ஸ்ரீ உ. வே. D. ராமஸ்வாமி ஐயங்கார் அட்வகேட் அவர்கள் "காஞ்சிபுரம் தேவராஜ ஸ்வாமி தேவஸ்தான'வரலாறு" என்றொரு சிறுபுத்தகம் தேவஸ்தான வெளியீடாக வெளியிடுவித்தார். அதில் பல அபத்தங்களும் அஸம்பத்தங்களும் மலிந்திருந்த தனுல் அவற்றையெல்லாம் களைந்து உண்மைவரலாறு வெளியிட அவசியமேற்பட்டது. அதனுல் அப்போதே வரதன்ஸன்னிதி வரலாறு என்கிற பெரிய புத்தகத்தை நாம் வெளியிட்டு D. R. வெளியீட்டிலிருந்த விபரீதங்களை யெல்லாம் ரிகார்டுகள் மூலம் களைந்திருக்கிறோம். அப்புத்தகத்தில் அவதாரிகைபோன்ற 10வது பாராவை இங்கெடுத்துக் காட்டுகிறோம்.

"இந்த தேவாலயத்தில் இடையில் பல வருஷங்கள் தலைவிரித்தாடி 25, 30 வருஷங் களாக சாந்தமாயிருக்கின்ற கலாவிவாதங்களை மீண்டும் கிளப்புவதற்கென்றே எழுதப்பட்ட விவாத வரலாற்றுச்சுவடியை தேவஸ்தான வெளியீடாகக் காட்டுவதும், தேவஸ்தானத்தில்

விற்பனை செய்யப்படுவதாகத் தெரிவிப்பதும் தகுதியற்றது. "ஆத்தான் ஜீயர், வடகலை ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த இந்தக்கோயிலில் தமது தென்கலையாசாரியரது பத்யத்தை யநுஸந்தித்துப் பிரபந்த ஸேவாகாலம் தொடங்க அனுமதி பெற்றார்" என்பது முதலான அஸம்பத்த விஷயங்கள் மலிந்த விவாத வரலாற்றுச்சுவடியானது இந்த தேவஸ்தானத்திற்கு வெகு தூரத்தளவிலே நிற்கத்தக்கதென்பதை நாம் விரிவுக்கு அஞ்சாது விபுலமாகவே நிரூபிப்போம்." —என்று அவதாரிகையிட்டு இதற்குமேல் 120 பாராக்கள் கொண்ட 16 அத்யாயங்கள் எழுதியிருக்கிறோம். அதில் (6ல்)

" விவாத வரலாற்றுச் சுவடியில் (பக்கம் 17-ல்) கோயில்நிர்வாஹம் என்ற மகுடத்தின் கீழ்—இந்த தேவஸ்தானத்தில் தாதாசார்ய வம்சஸ்தர்களுக்கு நிர்வாஹகத்வம் ஏற்பட்ட விதமும் அது கழிந்தவிதமும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. கி. பி. 1842-ஆம் வருஷத்திலிருந்து 1907-ஆம் வருஷம் வரை (65 வருஷகாலம்) தாதாசார்ய வம்சஸ்தர்கள் தர்மஹர்த்தாக்களாக இருந்தார்களென்றும், பிறகு ஸ்கீம்ஸூட் போடப்பட்டு கோவில் ஒரு ரிஸீவர் வசம் ஒப்புவிக்கப்பட்டதென்றும், அப்போது ஒருவிதமான முடிவு ஏற்பட்டதென்றும், மறுபடியும் ஸ்கீம்வழக்கு தொடுக்கப்பட்டு தேவஸ்தானம் மீண்டும் மற்றொரு ரிஸீவரிடம் ஒப்புவிக்கப்பட்டதென்றும், 1941-ஆம் ஹு அந்த வழக்கு சென்னை ஹைகோர்ட்டில் முடிவுபெற்ற வைஷ்ணவரல்லாதவொரு பிராமணர் நிர்வாஹ டிரஸ்டியாயிருக்கவேண்டு மென்று தீர்ந்த தென்றும், அது முதல் அவ்விதமாகவே நடந்து வருகிறதென்றும் வெகு சுருக்கமாக எழுதி முடிக்கப்பட்டிருக்கிறது. தாதாசாரியர்களின் கதைகளைச் சிறிதும் தொடாமல் விட்டிருந்தால் மிகநன்றே. அதை ப்ரஸங்கித்துவிட்டு முக்கியமான சரித்திரங்களை மறைத்திட்டு மழுப்பியெழுதிச் சுருக்கமாக முடித்துவிடுவதனால் உண்மைவிஷயங்கள் மறைந்து போகுமோ? ஒரு தடவைக்கு இரு தடவையாக தாதாசாரியர்களின்பேல் ஸ்கீம் ஸூட்டுகள் தொடர்ந்ததாகவும், தேவஸ்தானம் அவர்களிடமிருந்து பறிக்கப்பட்டதாகவும், முடிவாக அறவேபறிக்கப்பட்டதாகவும் எழுதினவர் இதற்கு இன்னது காரண மென்று காட்டியிருக்க வேண்டியது அவசியமல்லவா? இந்த லிடிகேஷன்களில் அடியோடு தலையிடாமல் தடஸ்தராய்.பகவத் ஸௌந்தர்ய லாவண்ய —மஹோத்ஸவாத்யநுபவத்தளவிலே நின்றிருந்தால் மிகவழகியதேயாகும்; 'தேவஸ்தான நிர்வாஹ விஷயத்திலே நாம் தலையிட்டெழுதுவது அபாயம்' என்று தெரிந்துகொள்ளக் கூடியவராயிருந்தும், உண்மை விஷயங்கள் க்ரமேண வெளிவரட்டு மென்றே இதில் தலையிட்டுக் கோடிகாட்டி விட்டார் போலும். ஸ்வாசார்ய குடும்பத்தின் சூழல்களைத் தமது திருக்கையால் எப்படி யெழுதுவர் பாவம்! இதோ நாம் எழுதுகிறோம்."

என்று பீடிகையிட்டுப் பல விஷயங்கள் எழுதியிருக்கிறோம். ஏழாமத்யாயம் பூர்த்தியாக, தாதாசாரியர்கள் தேவப்பெருமாள் ஸந்நிதியில் அர்ச்சையாக எழுந்தருளியிருக்கும் மணவாளமாமுனிகளிடத்தில் அபசாரப்பட்டு—தீவிரமாக அபசாரப்பட்டு ஹதமடைந்தவர்களைப்பற்றி விரிவாக எழுதியிருக்கிறோம். அதில் 16, 17, 18 பக்கங்களைக் காணவேணும். அப்புத்தகம் 1955 ஹு ஜூன்மாதத்தில் ஸ்ரீ ராமாநுஜன் மூலமாகவே வெளிவந்துள்ளது. [அப்புத்தகத்தை வாசிக்க விரும்புமவர்கள் 36 நயா பைஸா ஸ்டாம்பு அனுப்பினால் உடனே புக்போஸ்டு மூலம் அனுப்புவோம். அது அனைவரும் அவசியம் வாசிக்கவேண்டிய புத்தகம்.] மணவாள மாமுனிகளின் ஸந்நிதித் திருமுன்பே அபசாரப்பட்டவர்களுக்கு நேர்ந்த உபத்ரவங்களை நாம் விவரித்திருக்கிறோம். அதற்கு பதிலாக இவர்கள் இப்போதைய சுவடியில் "ஆசால் ராகவாசாரியர் ஸ்வாமி....பிள்ளைலோகம் சின்னவர்........மூலை

திருவேங்கடாசாரியர் ஸ்வாமி....நாட்டுபெந்தம்மாள்...விஞ்சிமூர் பாஷ்யகாரர் ஸ்வாமி" இத்யாதிகளை அடுக்கியிருக்கிறார்கள். இதற்குத் தெரிவிக்கவேண்டிய பதிலை அடுத்தபடியாகத் தெரிவிப்போம். அடுத்த பக்கத்திலேயே பார்க்கப்போகிறீர்கள்.

தீவ்ராபசாரப் பட்டவர்களாகவும் அவ்வபசார பலனை உடனே அநுபவித்தவர்களாகவும் நாம் எழுதியிருந்த விஷயத்தில் இவர்கள் ஏதாவது மறுப்பு எழுதியிருப்பதுண்டாவென்று பார்ப்போம். ஒருவருடைய அபசாரத்தையும் அவ்வபசார பலனையும் இவர்கள் மறுக்கவில்லை. பெருங்கட்டூர் குமார தாதாசாரியரும் பூந்தி தாதாசாரியரும் பட்ட அபசாரமே அதிகம். அவர்களுக்கு நேர்ந்த ஊர்மதிதான் ஆச்சரியமானது. அவற்றை யாரால் இல்லைசெய்ய முடியும்? ஆம் ஆம் என்னவேண்டியதே. இவ்விருவரையும் பற்றி இவர்கள் எழுதியிருப்பதென்னவென்றால்; பெருங்கட்டூர் தாதாசாரியர் விசேஷமாக புஷ்ப கைங்கரியமும் பாலமுது கைங்கரியமும் செய்தவராம். அதை நாம் எழுதாமல் அவர் பட்ட அபசாரத்தையும் அநுபவித்த அனர்த்தங்களையும் மட்டுமே எழுதினோமாம். இவ்வளவோடு இவர் விஷயம் முடிந்திட்டது. பூந்தி தாதாசாரியரைப்பற்றி என்ன எழுதுகிறார்களென்றால், நம்மாழ்வாருக்கெதிரில் மணவாள மாமுனிகளுக்கு விசேஷப்பந்தல்கள் விசேஷப்படிகள் விசேஷப்புறப்பாடுகள் கூடாதென்கிற காரணத்தினாலேயே அவர் மாமுனிகளிடத்தில் அபசாரப் பட்டாராம். இந்த மருளைத் தொலைத்திடுவோம்.

ஆங்காங்கு தேவஸ்தானங்களில் ஆழ்வாராசாரியர்களெல்லார்க்கும் நடைபெறுகிற மரியாதைகள் சிறப்புகள் முதலானவற்றில் ஸமமான ரீதி ஓரிடத்திலும் காண்பதில்லை. ஒவ்வொரு காரணத்தினால் ஒவ்வொருவர்க்கு ஏற்றம் ஏற்பட்டு அதற்கு ஏற்ற சிறப்புகளும் ஏற்பட்டிருக்கின்றன. மணவாளமாமுனிகளுக்கு அமைந்துள்ள தனியன் சிறப்பும் வாழித் திருநாம வைபவமும் மாமுனிகளுக்கே அஸாதாரணமானது. வேறுயார்க்குமில்லை. தேசிகன் சாத்துமுறையன்று வாஹனமண்டபதேசிகன் தேவப்பெருமாளோடுகூட ஸன்னிதி வீதி யெழுந்தருளுகிறார். இது மற்ற ஆழ்வாராசாரியர்களுக்கில்லை. மற்ற ஆழ்வாராசாரியர்களுக்கில்லாத விது இவர்க்குமட்டுமென்ன? என்று பூந்தி தாதாசாரியர் திட்டுடனே தண்டைத்தள்ளி இதையும் ஆக்ஷேபித்திருப்பாரானால் நன்றே. மணவாளமாமுனிகள்பால் அபசாரப்பட்டால்தான் நமக்கு ஸத்ய: பலன் கிடைக்குமென்று அவர்க்குத் தெரியும். அப்படியே கைமேல் பலன் கண்டார். தேவப்பெருமாள் ஸன்னிதியில் மணவாள மாமுனிகளுக்கு மாமூலாக எவ்வளவு வைபவமுண்டோ அவ்வளவும் குறையற அன்றுபோல் இன்று, இன்றுபோல் என்றும் நடைபெற்று வரும்படியாகவே தாதாசாரிகள் செய்திட்டார்கள். இவர்கள் பட்ட அபசாரமும் கைமேல்கண்ட பலன்களுமே மிச்சம். இன்னமும் இவர்களுக்கு அபசார ருசி அகன்றதில்லை. தலைவிதி தொலையாதே. (இனி அடுத்த விஷயம்.) ஸந்ததியைப் பற்றின ஆஸ்தாவமே நாம் செய்யாதிருக்க ஏற்ட்டு தூஷிப்பது அநுக்தோபாலம்பம். திருப்புட்குழி ஸ்வாமியின் பெருமைகள் அபாரம் என்று காட்டுகிறார். இதை மறுப்பாரார்? ஸ்ரீமத் வில்லியம்பாக்கம் ஸ்வாமிபோல் நிஷ்களங்கமான கீர்த்தி பெறுதற்கு பாக்கியம் அவர்க்கு இல்லையே. சிறுமைகளைச் சொல்லியாகவேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டால் பெருமைகள் பாறிப் பறந்து போமே. விச்வாமித்திரர் மஹாமஹர்ஷியே. அதனால் அவருடைய ஹேயசரித்திரங்கள் இல்லை செய்யப்படுமோ?

இனி ஸ்ரீ உ. வே. ஆசால் ராகவாசாரியர் ஸ்வாமி... இத்யாதிகளைப் பற்றியும் ருஜுவான விடை யளிப்போம். அநாமதேயர்களான இவர்கள் எடுத்துக் காட்டியுள்ள வ்யக்தி

களில் ஒருவர்கூட தேசிகத்வேஷம் கொண்டவரல்லர். 'தென்கலைத் திருமண் அணிந்து கொண்டிருப்பதே தேசிகத்வேஷத்தினால்தான்' என்பது இவர்களுடைய அசட்டுத்தனமான எண்ணம். வடகலை நாமமிட்டவர்களை யெல்லாம் வரவர முனித்வேஷிகளாக நாம் கருத வில்லை. அவரவர்கள் அபசாரப்பட்ட விதங்களை இவர்களால் மறுக்க முடியாதபடி விவரித்திருக்கிறோம். தேசிகனிடத்தில் இன்ன தென்கலைஸ்வாமி இன்ன அபசாரப்பட்டாரென்று லவலேசமேனும் இவர்களாலெடுத்துக்காட்ட முடியுமோ? "தேசிகனிடத்தில் அபசாரப் பட்டால் அவர்கள் க்ஷேமப்படுவர்கள்" என்று எழுதினாருண்டோ? நினைப்பார் தாமுண்டோ?

வலயபேட்டை ஸ்வாமியென்கிற வொரு மஹான் உண்மையில் மிகச் சிறந்த பெரியார். அவர் காஞ்சியில் வந்துசேர்ந்து கோரமான விபத்தை யடைந்தார். "மணவாள மாமுனிகளிடத்தில் அபசாரப்பட்டுத்தான் அவர் அப்படியானார்" என்று யாரேனு மெழுதியிருப்பதுண்டோ? 'அரியலூர் ஆபத்து' என்று ப்ரஸித்தமானவொரு (ரைல்வே) விபத்தை— மஹா கோரமானதை மறந்திருக்கமாட்டீர்கள். இப்படி பலபல விபரீத ஸம்பவங்கள் உலகில் தினந்தோறும் க்ஷணந்தோறும் நிகழ்கின்றன. அவற்றையுங்கூட இவர்கள் எடுத்தெழுதிக் கொண்டிருக்கட்டுமே. "யத்-நஹூநம் யஹவதி தத்தவஸ்ய காரணம்" என்கிற சாஸ்த்ரீய நியமத்தைக்காட்டி நாமெழுதியிருக்கிற பெருங்கட்டுரை—ப்ரந்தி விஷயங்கள் உள்ளூரும் சிந்தை நோய்கொண்டு உள்ளே யுருகி நைவதற்கு உடலேயல்லது எந்தபதிலுமுரைக்கத்தாமன்று.

மூலை திருவேங்கடாசார்ய ஸ்வாமி திருமாளிகை வடகலையார்களுடையதாக ஆய் விட்டதாய் கொந்தளிக்கிற இந்த அசடுகளுக்கு என்ன சொல்லுவது! அந்த ஈச்சம்பாடி ஸ்வாமிக்குப் பௌத்திரர்கள் அறுவர்; அவர்களில் நால்வர் உத்துங்கபதவிகளில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். உத்யோகமுள்ள விடங்களில் பெரிய பெரிய மாளிகைகள் வாங்கியிருப்பதனால் பழையக்ருஹத்தை விற்றனர்; அதனாலென்ன? ஸ்ரீ. உ. வே. ஆசால் ராகவாசார்ய ஸ்வாமியின் ஸந்ததியோ குடும்பமோ மிகச் சிறந்து விளங்குகின்றதேயன்றி வேறில்லை. ஸ்ரீ. உ. வே. விஞ்சிமூர் பாஷ்யகாராசார்ய ஸ்வாமியின் திருக்குமாரரும் திருத்தகப்பனார் நிர்வஹித்துவந்த கைங்கரியங்களைச் சிறப்புற நடத்தியே வருகின்றார். இவ்வுலகில் பிறப்பவர்கள் சிரஞ்சீவி பட்டம் பெற்றுப் பிறப்பாராருமில்லை. அவரென்னவானார்? இவரென்னவானார்? என்று இவர்கள் கேட்கிற கேள்விகளுக்கு ஏதேனும் அர்த்தமுண்டோ? உலகத்தில் பிறக்கிற எல்லாரையும் பற்றி இவர்கள் இக்கேள்வி கேட்டுக்கொண்டிருக்கலாம். ஆக இவர்களின் ப்ரஸங்கம் காசுக்கு முதவாதவை யென்று விட்டொழிக்க.

இவர்களழுகிற அழுகைகளிலே "தேசிக ஸ்ரீஸூக்திகள் தமக்கே யென்கிறார்" என்பது மோரழுகையாக வுள்ளது. "அண்ணிக்கு மமுதூறு மென்னாவுக்கே" என்று மதுரகவிகள் சொல்லிக்கொள்ளுகிறார்; * பெருஞ்கேழலார் தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேலொருங்கே பிறழவைத்தார் * என்கிறார் நம்மாழ்வார். "மம மாதாம் மம பிதாம் மம ஸர்வம்" என்கிறாரெம்பெருமானார். இவை எல்லாவற்றுக்கும் மேற்பட "யானறிந்தவாறு—ஆரறிவார்" என்கிறார் திருமழிசைப்பிரான். இப்பாசுரங்களைப் பிறர்தாமும் சொல்லிக் கொண்டால் தடுப்பாருளரோ? 'தேசிக ஸ்ரீஸூக்திகள் எமக்கே' என்று இவர்கள் சொல்லிக்கொண்டால் தும்புவாருளரோ? ஆனால் அங்ஙனே சொல்லிக்கொள்ள இவர்களுக்குத் துணிவு இல்லையே. "கிடந்திருந்து நின்றளந்து கேழலாய்க் கீழ்புக்கிடந்திடும் தன்னுள் கரக்குமுமிழும்" "பாரிடந்து பாரையுண்டு பாருமிழ்ந்து பாரளந்து பாரையாண்ட பேராளன்" என்னுமிடங்களில் நம் ஆசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளுகிறபடி, தேசிக

க்ரந்தங்களைப் பரிஷ்கரித்துப் பதிப்பிப்பது, அவற்றுக்கு அரியபெரிய வியாக்கியானங்களிடுவது, அவற்றிலுறையும் ரஸகனமான பொருள்களைக் குன்றிலிட்ட விளக்காகக் காட்டுவது, தேசிக விக்ரஹத்தை ஆராதிப்பது, தேசிகோத்ஸவ கோஷ்டிகளை நிர்வஹிப்பது, இவை இத்தனை செய்தும் ஒன்றும் செய்திலோமே! என்று நெஞ்சாறலோடேயிருப்பது ஆக இவற்றால் 'தேசிகன் நமக்கே; தேசிகஸூக்திகளும் நமக்கே' என்னுமாவலிப்புடைமைக்கு நாமே தான் இட்டுப் பிறந்தோம். மேலேசொன்னவற்றில் ஒன்றுக்கும் இடமல்லாத இவர்கள் காட்டும் தேசிகபக்தி எப்படிப்பட்டதென்றால், "தேசிகனைக் காலைவாரி யிழுத்துவிட்டார்கள், தேசிகன் தலையிலேபடும்படி பாதரக்ஷையைத் தொங்கவிட்டார்கள், தேசிகன் ச்ராத்தம் கெடும்படி நிமந்த்ரண ஸ்வாமிகளைக் கலைத்திட்டார்கள், ஏகாதசியன்று பொங்கலைக் கொணர்ந்து கொடுத்து உண்ணச்சொன்னார்கள், பலவித ஹிம்ஸைகளை யநுபவிக்கச் செய்தார்கள்" என்றிப்படி கட்டுக்கதைகளைக் கட்டி ப்ரசாரம் செய்வதிலே பர்யாப்தம். போதுமே இவர்களின் தேசிக பக்தியழகு! இவர்களே தேசிகபக்தமணிகளாய் வாழ்க. இந்த பக்தி நமக்கில்லைதான்.

இவர்கள் வீணாகக் கல்பனை செய்கிற கட்டுக்கதைகளை நாம் ப்ரமாண புரஸ்ஸரமாகக் கண்டித்தால் அதற்கு ருஜுவான விடைகூறமாட்டாமல் தேசிகத்வேஷியென்று தூஷிப்பது இவர்களுக்குத் தலைவிதியாயிற்று. உடையவர் ஆச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டது ஸ்ரீரங்கத்தில் என்று ஒருவர் சொல்ல, அதை யொருவர் கண்டித்து காஞ்சிபுரியில்தான் நடந்ததென்று உண்மையை வெளியிட்டால் இவர்க்கு ஸ்ரீரங்கத்தில் த்வேஷமென்றோ உடையவரிடத்தில் த்வேஷமென்றோ சொல்லுவாருண்டோ? நடாதூரம்மாளுடைய ஸ்ரீபாஷ்ய ப்ரவசநம் காஞ்சியில் திருமலைமேல் நடந்ததா? கீழே படிக்கட்டில் நடந்ததா? என்கிற விசாரம் ஆவச்யகமன்று. அவருடைய ப்ரவசநகோஷ்டியில் தேசிகனெழுந்தருளி அவருடைய அநுக்ரஹம் பெற்றது அவருடைய திருமாளிகையிலேயே யென்பதை ஆசார்ய சம்பூகாரர் ஸ்பஷ்டமாக எழுதிவைத்திருக்கிறார். அதை நாமெடுத்துக்காட்டினால் இதில் தூஷணைக்கு இடமேது? அந்த ஸம்ப்ரதாயரைத்தான் தேசிக த்வேஷியென்னவேணுமிவர்கள்.

தேசிகனுடைய திவ்யக்ரந்தங்களெல்லாம் வியாக்கியான ஸாபேக்ஷங்களாயிருக்கின்றன; இவர்கள் பரம்பரையாக தேசிகனைப் பேணுகிறவர்களாயிருந்தால் அக்காலமே தொடங்கி வியாக்கியானங்கள் செய்து வந்திருக்கவேண்டும்; நவீன காலத்தில் தான் வியாக்கியானங்கள் ஏற்பட்டு வருகின்றன; இக்காரணத்தாலும் வந்தேறிகள்—என்று நிரூபித்தோம். இதற்கிவர்கள் கொடுக்கும் ப்ரதிவசநம் யென்னவென்றால், திவ்யப்ரபந்தாதிகளுக்கு முன்னமே வியாக்கியானங்கள் ஏற்பட்டிருக்கலாமே. ஏனில்லை அக்காலத்தில் ஸ்ரீவைஷ்ணவர்களில் பண்டிதர்கள் இல்லையா? என்று. இதற்குக் கேண்மின்; * ஓராண்வழியாயுபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால்—பாருலகில், ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறுமென்று பேசிவரம்பறுத்தார் பின் * என்கிற மாமுனிகள் பாசுரமறியாரிவர்கள். உடையவர்காலம்வரையில் அர்த்த விசேஷங்கள் ரஹஸ்யமாகவேயிருக்கவேணுமென்கிற வொரு கொள்கை அனைவர்க்குமிருந்துவந்தது. அதனால்தான் அப்போது வியாக்கியானங்கள் அவதரிக்கவில்லை. உடையவர்கட்டளை ஸாம்ராஜ்யம் செல்லுகிறகாலத்தில் வியாக்கியானங்கள் தோன்றாமைக்கு அதை ப்ரதிவசநமாகப் பேசுவது பொருந்தாது.

ஒரு தத்துவமுமறியாமல் எதையும் த்வேஷகார்யமாகவே கொள்ளப்பிறந்தவர்களிவர்கள். இவர்களுக்குரைப்பது ஊமையரோடு செவிடர் வார்த்தையே. ... ... (*)

முகவுரை முற்றும்.

ஸ்ரீ

பேரருளாளன் பெருந்தேவித் தாயார் திருவடிகளே சரணம்.



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் எழுதிய

# உபந்யாஸவிம்சதி

ஶ்லோ ॥ உபதேஶவிம்ஶதிம் வ்யாகரோ வ்யுத்பித்ஸூ ஸதாம் ஸதாம் ஹிதார்த்தாய ஸதாம் ।
ஸம்ப்ரதி ஸத்பவந்யாஸாந் விம்ஶதிம் பவஹாரத்ய ரஞ்ஜயே விபஶ்சித: ॥

ஞானச் சுடர்விளக்கில் ஞானப் பிறழ்வதனால்
ஈனச்சொல் லீட்ட மெடுத்தடுக்கி—ஊனக்கண்
மேன்மைதனை மேதினியில் வீறுபெறு வித்தவர்செய்
தீமைகளைச் செப்பிடுவேன் தீர்த்து.

இவ்விருபது உபந்யாஸங்களில் ஒவ்வோருபந்யாஸமும் சாஸ்த்ரார்த்த தத்துவங்களை யுணர்த்தி, கலங்கினுரைத் தெளிவிக்கு மதாதலால் இந்த விம்சதி வித்வான்களுக்கு விசிஷ்ய போக்யமாயிருக்கும்.

## — 1. திவ்ய தேசவாஸி ப்ராஹ்மண ப்ரசம்ஸை. —

திவ்ய ப்ரபந்தங்களில் நீர் வளம் நில வளம் மாடமாளிகை மதிட் கோபுரச் சிறப்புகள் முதலானவற்றை வருணிப்பது போல ஆங்காங்கு வாழும் அந்தணர்களின் அதிசயங்களையும் வருணிக்கக் காண்கிறோம். தில்லைத் திருச்சித்திரகூடத்தை வருணிக்கின்ற குலசேகராழ்வாரும் திருமங்கையாழ்வாரும் "அந்தணர்களொரு மூவாயிரவரேத்த" என்றும், "மூவாயிர நான்மறையாளர் நாளும் முறையால் வணங்க" என்றும் அருளிச் செய்துள்ளார்கள். அத்தலத்தில் மூவாயிரவர் பிராமணர்கள் இருந்ததாகவுள்ள ப்ரஸித்தி அருளிச் செயலில் ஏறியிருக்கின்றது. நம்மாழ்வார் திருவாய்மொழியில் திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாற்றை வருணிக்கும் * வார்கடாவருவிப்பதிகத்தில் * அமர்ந்தசீர் மூவாயிரவர் வேதியர்கள் தம்பதி அவனி தேவர் வாழ்வு * என்று அத்தலத்திலும் மூவாயிரவர் வேதியர்கள் பெருமேன்மையோடு வாழ்வதாக அருளிச்செய்துள்ளார்.

குட்டநாட்டுத் திருப்புலியூரை வருணிக்குமிடத்தும் "மல்லைச் செல்வ வடமொழி மறைவாணர் வேள்வியுள் நெய்யழல் வான் புகைபோய்த் திடவிசும்பி லமரர்நாட்டை மறைக்கும்" என்று, அவ்விடத்தில் வடமொழி வேதத்தை யோதினவர்களும் வேள்விபுரியு

மவர்களுமான அந்தணர்கள் வாழ்வதாகக் கூறியுள்ளார். அவர் தாமே திருவல்லவாழைப் பாடுமிடத்தும் "பாடுகல் வேதவொலி பரவைத் திரைபோல் முழங்க, மாடுயர்ந்து ஓமப்புகை கமழும்" என்று வேதயஜ்ஞ ஸம்ருத்திகளைப் பேசியுள்ளார். திருமங்கை யாழ்வாருடைய திருவாக்கில் "நல்ல வெந்தழல் மூன்றுநால் வேதம் ஐவேள்வியோடாறங்கம் வல்லவந்தணர்" என்றும் "அங்கமாறைந்து வேள்வி நால்வேத மருங்கலை பயின்று எரிமூன்றும் செங்கையால் வளர்க்கும்" என்றும் இத்தகைய பாசுரங்கள் விசேஷமாக வெளிவருகின்றன. திருவல்லவாழ், திருச்செங்குன்றூர்த் திருச்சிற்றாறு, குட்ட நாட்டுத் திருப்புலியூர் என்னுமித்தலங்கள் மலையாள க்ஷேத்திரங்கள். அவ்விடங்களில் ச்வேதம்ருத்திகையினாலாகிய ஊர்த்வ புண்ட்ர மணியும் ஸ்ரீ வைஷ்ணவர்கள் வாழ்ந்துகொண் டிருந்தார்களென்றும் அன்னவர்களையே ஆழ்வார்கள் பாடினரென்றும் சொல்லமுடியாது, நெஞ்சாலும் நினைக்கமுடியாது. ப்ராமாணிகர்கள் நினையார்கள், சொல்லார்கள். இந்த நூற்றாண்டிலும் சில பல நூற்றாண்டுகட்கு முன்னமும் அந்த க்ஷேத்திரங்கள் ப்ராஹ்மணர்கள் என்னத்தக்கவர்களுக்குத் தவிர ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆள்பதமல்ல. "ஏகாந்தி நாம ஸாத்வஸ ஹஸ்ரை: ஸம்ஸேவித ஸம்பவிஷ்யதி = ஏகாந்திநாம் த்வாதசபிஸ் ஸஹஸ்ரைஸ் ஸம்ஸேவிதஸ் ஸம்யமிநாம் ஸப்த சத்யா." என்று வடுகநம்பிகொண்டாடும் பெருமை எம்பெருமானார் காலத்தில்தானே ஏற்பட்டது. அது தானும் அவருடைய காலத்தோடே போயிற்றல்லது சாகோபசாகமாக அநுவர்த்திக்கவுமில்லை. எழுநூறு ஜீயர்கள் [உத்தமாச்ரமிகள்] உடையவரை அடிபணிந்திருந்ததாகச் சொல்லிற்று, இப்போது ஸ்ரீ வைஷ்ணவ உலகம் முழுவதிலும் ஏழு ஜீயர்களைக் காண்பது அரிதாயிருக்கின்றது. ஆகவே, ஆழ்வார்கள் அந்தணர்களென்றும் அவனி தேவர்களென்றும் நிலத்தேவர்குழுவென்றும் புகழ்ந்திருப்பது ப்ராஹ்மண ஸாமாந்ய விவக்ஷையினாலென்பதே தத்துவம். வியாக்கியானங்களில் ஸ்ரீவைஷ்ணவர்களென்று சில விடங்களில் யோஜித்திருந்தாலும் விஷ்ணுபக்தர்களென்றிட்டேயல்லது ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயஸ்தர்களென்கிற விவக்ஷையினாலன்று. எற்றிட்டுப் பொருளுரைப்பது ஏலாது.

ஆழ்வார்கள் விசாலஹ்ருதயர்களானமையாலும், ப்ராஹ்மணாபிமானமும் வைதிக பக்ஷபாதமும் மிக்கவர்களாகையாலும் * அவரே யவர்கண்டீரென்றது கழுத்தளவிலேயன்றிக்கே நாபியளவுமாகி வர்ணாச்ரம தர்மநிஷ்டர்களாய் விஷ்ணு த்வேஷமந்தமுமற்றவர்களான ப்ராஹ்மணர்களைக் கொண்டாடியுள்ளார்கள். 'ஸ்ரீவைஷ்ணவர்களையுந்தான் கொண்டாடியிருக்கிறார்கள்' என்றால் இதை யாரும் மறுப்பாரில்லை. புண்ட்ரத்தில் கண் செலுத்தாமல் பொதுவாக ப்ராஹ்மண ஸமுதாயத்தைக் கொண்டாடி யிருக்கிறார்களென்று கொள்ளக் கடவது. இற்றைக்கும் நாளைக்கும் திவ்ய தேசங்களில் ஸ்ரீவைஷ்ணவர்களைவிட ப்ராஹ்மணர்கள் மலிந்திருப்பதைக் காணுகின்றோம். "எரி மூன்றும் செங்கையால் வளர்க்கும்" என்றும் "நல்ல வெந்தழல் வல்லவர்" என்றும் சொல்லும்படியாக யஜ்ஞயாகங்கள் செய்யு மூற்றத்தினரான ஸ்ரீவைஷ்ணவர்கள் தேடிப்பிடிக்க வேண்டியவர்கள். நம்முடைய ஆசார்ய பரம்பரையில் பரம சிஷ்டர்களாயிருந்தவர்கள் ஒருவராவது யஜ்ஞம் செய்ததாகக் கேட்டதில்லை. வடநாடுகளில் த்விவேதீ, த்ரிவேதீ, சதுர்வேதீ என்னும் உபநாமங்கள் குடும்பந்தோறுமுண்டு. அதற்குப் பர்யாயமான பிருதாவளிகள் தென்னாட்டிலும் சிலர்க்குண்டு. இதைப் பற்றிக் கீர்த்தி மூர்த்தியான ஸ்ரீ மதுபயவே. கோஷ்டீபுரம் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி பரக்க உபபாதித்து ஸாதிக்கக் கேட்டதுண்டு. அந்த விஸ்தாரங்கள் இங்கு அநபேக்ஷிதம். இந்த உபந்யாஸத்திற்கு சேஷபூதம் அடுத்த இரண்டாமுபந்யாஸம். (*)

## 2. ஆசார்ய ஹ்ருதயத்தில் துறைவேறிடுவித்தது.

ஆசார்யஹ்ருதயத்தில் (32) "ஸாதந ஸாத்யங்களில் முதலும் முடிவும் வர்ண தர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறைவேறிடுவித்தது." என்பதொரு சூர்ணை. அந்த வட்டத்தில் மூலகாரரால் தெரிவிக்கப்படும் விஷயமென்னவென்றால், கேண்மின்: ஶாஸ்த்ரம் ஶாஸ்த்ர ஸாரம் என்று இரண்டாகப் பிரித்துக்கொண்டு திருமந்த்ரம் தவிர மற்றநூல்களை ஶாஸ்த்ர மென்றும், திருமந்த்ரத்தை ஶாஸ்த்ர ஸாரமென்றும் பரக்க நிரூபித்து வந்தார். அது பதினறு சூர்ணைவரையிலாயிற்று. (17) "முனிவரையிடுக்கியும் முன்னீர் வண்ணனும் வெளியிட்ட சாஸ்த்ர தாத்பர்யங்களுக்கு" இத்யாதி சூர்ணையிலிருந்து விசேஷ நிரூபணம் தொடங்கப் பெற்றது. தாத்பர்ய மென்பதும் ஸாரமென்பதும் பர்யாயம். வ்யாஸாதி மஹர்ஷிகள் முகேந வெளியிட்டவை சாஸ்த்ரங்களென்றும், பதரிகாச்ரமத்தில் ஸ்வேநரூபேண நின்று வெளியிட்டது சாஸ்த்ரஸாரமென்றும் விளக்கி சாஸ்த்ர மாத்ரத்திலூன்றினவர்களின் படிகளையும், சாஸ்த்ரஸாரமான திருமந்த்ரத்திலூன்றினவர்களின் படிகளையும் விவரித்துக்கொண்டு போகையில், சாஸ்த்ர நிஷ்டர்கள் கர்மாநுஷ்டானத்தில் மட்டும் ஊக்கங்கொண்டு கைங்கர்யத்தினருகும் சாரார்களென்றும், சாஸ்த்ரஸார நிஷ்டர்கள் கைங்கர்யத்திலே மிக்க ஊக்கங்கொண்டிருப்பர்களென்றும் நிரூபித்து வந்து, முப்பத்திரண்டாம் சூர்ணையான [ஸாதநஸாத்யங்களில் முதலும் முடிவும்] இத்யாதியினல் கைங்கர்ய நிஷ்டர்க்குக் கர்மநிஷ்டர்களோடு சேர்த்தியில்லாமையைப் பேசிநின்ருர்.

ஸாதநமென்ருல் உபாயம்; ஸாத்யமென்ருல் பலன். உபாயங்களைச் சொல்லும் போது கர்மஜ்ஞான பக்தியென்று தொடங்கிச் சொல்லுகையாலே உபாயங்களில் முதலடி கர்மம். பலன்களின் பரம்பரையில் கைங்கர்யத்திற்கு மேற்பட வொன்றுமில்லாமையாலே அதில் முடிந்த நிலம் கைங்கரியம். ஆக, "ஸாதந ஸாத்யங்களில் முதலும் முடிவும்" என்றது—கர்மமும் கைங்கர்யமும் என்றதாயிற்று. இவை செய்த காரியத்தை அடுத்தபடியாகச் சொல்லுகிருர் "வர்ணதர்மிகள் தாஸவ்ருத்திகளென்று துறைவேறிடுவித்தது" என்று.

இங்கே விவேகிகள் ஊன்றி நோக்கவேணும். கீழ்ச் சூர்ணைகளின் முடிவையும் இந்த சூர்ணையின் முடிவையும் உற்று நோக்கினல் ஒரு வாசி தெரியவரும்; (அதாவது) எண்ணுவர்கள்—உண்டாம்—ஆக்கும்—அறுக்கும்—கழுவும் என்றுள்ளது கீழ்ச் சூர்ணைகளில். எண்ணுவர்கள் என்ற ஸ்தாநத்தில் எண்ணினர்கள் என்றில்லை. உண்டாம் என்ற ஸ்தானத்தில் உண்டாயிற்று என்றில்லை. ஆக்கும் என்ற ஸ்தானத்தில் ஆக்கிற்று என்றில்லை. அறுக்கும் என்ற ஸ்தானத்தில் அறுத்தது என்றில்லை. கழுவும் என்ற ஸ்தானத்தில் கழுவிற்று என்றில்லை. ஏனில்லையென்ருல், அப்படி இறந்தகாலமாகச் சொன்னல் 'இன்ன இடத்தில் இது ஆயிற்று' என்று காட்டவேண்டியது அவசியமாகும். அப்படி காட்டியாகவேண்டிய ப்ரஸக்தியில்லாதவிடங்களில் இறந்தகாலமாகப் பிரயோகிக்கமாட்டார்கள். 'மழை பெய்தால் ஏரி நிரம்பும்' என்று ஒருவர் சொன்னல் அதன்மேல் கேள்வி பிறவாது. 'மழை பெய்து ஏரி நிரம்பிற்று' என்ருல் 'எவ்வூரில் ஏரி எப்போது நிரம்பிற்று?' என்கிற கேள்விகள் பிறக்கும்.

ப்ராக்ருத சூர்ணையில் "துறை வேறிடுவிக்கும்" என்னுதே "துறை வேறிடுவித்தது" என்றுள்ளதனல், துறைவேறிடுவித்ததெங்கே? அதன் ப்ரகாரம் யாது? என்கிற ஜிஜ்ஞாஸை

2

பிறந்தே தீரும். அதற்கு ஸமநமாகும்படி வியாக்கியானம் அவதரிக்க வேண்டுவது ஆவச்யகம். ஆகவே மூலகாரருக்கு விவக்ஷிதமாய் அக்காலத்தில் ஸுப்ரஸித்தமாயிருந்த தொரு வரலாறு மணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில் காட்டப்பட்டது. அதாவது,

> "திருவயிந்திரபுரத்திலே வில்லிபுத்தூர்ப் பகவரென்பாரொருவர், எல்லாருமொரு துறையிலே அநுஷ்டானம் பண்ண, தனியே ஒரு துறையிலே அநுஷ்டானம் பண்ணுவாராய் ஒரு நாள் அநுஷ்டானம் பண்ணி மீளா நிற்கச்செய்தே இருந்த ப்ராஹ்மணர் 'ஜீயரே! எங்கள் துறையிலே அநுஷ்டானம் பண்ணவாராதொழிகிறதென்?' என்ன; * விஷ்ணுதாஸா வயம் யூயம் ப்ராஹ்மணா வர்ணதர்மிண:, அஸ்மாகம் தாஸவ்ருத்தீநாம் யுஷ்மாகம் நாஸ்தி ஸங்கதி: * என்று துறைவேறிட்டுப் போனாராய்த்து."

என்பது மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி. ஐம்பது ஆண்டுகட்கு முன்பு தெலுங்கு லிபியில் மட்டும் அச்சிடப்பட்டுள்ள ஜநந்யாசார்ய வியாக்கியானத்திலும் இங்ஙனமேயுள்ளது.

## 3. வில்லிபுத்தூர்ப் பகவர் வார்த்தையின் ஆதாரம்.

உடையவர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்த அருளாளப் பெருமாளெம்பெருமானார் அருளிச் செய்த ஞானஸாரத்தில் ஒவ்வொரு பாட்டும் ப்ரமாண வசனங்களை யுட்கொண்டே அவதரித்ததென்பது ஸுப்ரஸித்தம். அந்த ஞானஸாரம் பாசுரந்தோறும் ப்ரமாணஸஹிதமாக்கப்பட்டு அப்படியே அச்சிடப்பட்டுள்ளது. அதில் பதின்மூன்றும் பாட்டு—

> "பண்டே உயிரனைத்தும் பங்கயத்தாள் நாயகற்கே
> தொண்டா மெனத்தெளிந்த தூமனத்தர்க்கு—உண்டோ
> பலகற்றும் தம்முடம்பைப் பார்த்தபி மானிக்கும்
> உலகத் தவரோ டுறவு." என்பது.

அதற்கான ப்ரமாண ஸங்க்ரஹத்தில்

> "வில்லிபுத்தூர்ப்பகவர் வார்த்தை; "𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌦𑌾𑌸𑌾 𑌵𑌯𑌂 𑌯𑍂𑌯𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾 𑌵𑌰𑍍𑌣𑌧𑌰𑍍𑌮𑌿𑌣𑌃 । 𑌅𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌦𑌾𑌸𑌵𑍃𑌤𑍍𑌤𑍀𑌨𑌾𑌂 𑌯𑍁𑌷𑍍𑌮𑌾𑌕𑌂 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌸𑌂𑌗𑌤𑌿𑌃 ॥ 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 𑌸𑌂𑌗𑌤𑌿𑌰𑌸𑍍𑌮𑌾𑌕𑌂 𑌯𑍁𑌷𑍍𑌮𑌾𑌕𑌂 𑌚 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌮𑍍 । 𑌵𑌯𑌂 𑌤𑍁 𑌕𑌿𑌂𑌕𑌰𑌾 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋𑌃 𑌯𑍂𑌯𑌮𑌿𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌯𑌕𑌿𑌂𑌕𑌰𑌾𑌃 ॥ [illegible] 𑌯𑍂𑌯𑌂 𑌯𑍂𑌯𑌂 𑌵𑌯𑌂 𑌵𑌯𑌮𑍍 । [illegible] 𑌪𑌰𑌾 𑌯𑍂𑌯𑌂 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣𑌪𑌰𑌾 𑌵𑌯𑌮𑍍 ॥"

என்றிருப்பதைக் காணலாம். மூலப் பாசுரத்திற்கு ப்ரமாணவசனம் காட்டுமவர்கள் மூலம் அவதரிப்பதற்கு முற்பட்ட வசனங்களைக் காட்டுவர்களே யல்லது பிற்பட்ட வசனங்களைக் காட்டார்களென்பது நிர்விவாதம். ஏவஞ்ச, வில்லிபுத்தூர்ப் பகவர் வார்த்தை யென்பது அருளாளப் பெருமாளெம்பெருமானாருடைய காலத்திற்கு முற்பட்டதென்பது நன்கு தேறிற்று. இந்த ஸம்வாதமானது ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் பரஸ்பரம் நடந்ததன்று. ஸ்ரீவைஷ்ணவர்க்கும் ப்ராஹ்மணர்க்கும் நடந்ததென்பது உதாஹ்ருத ப்ரமாண வசனங்களால் தேறுவது தவிர, விசதவாக் சிகாமணிகளின் வியாக்கியானத்தில் "இருந்த ப்ராஹ்மணர்" என்கிற ஸ்பஷ்டோக்தியாலும் தேறுகிறது. ஸ்ரீ வைஷ்ணவர்கள் குறைந்து ப்ராஹ்மணர்கள் நிறைந்திருந்த காலத்திலே நடந்த செய்தி அது. இப்போது பலபல அக்ரஹாரங்களில் ஸ்ரீவைஷ்ணவர்கள் ப்ராஹ்மணர்கள் என்கிற வாசியின்றிக்கே அனைவரும் ஒரு துறையிலே குடைந்தாடும் வழக்கமுள்ளது. இப்போதென்று என்ன? பண்டைக் காலத்

திலுமுண்டு. வில்லிபுத்தூர்ப் பகவரென்பவர் விசிஷ்ட பரமைகாந்தி ஸ்ரீவைஷ்ணவ ஸார்வ பௌமராகையாலே அவர் கேவல ப்ராஹ்மணர்களோடு கலந்து அனுஷ்டானம் பண்ண அருவருத்து உறவறுத்துப் பேசினாரென்பது உள்ளது.

இந்த வரலாற்றில் ஸ்ரீ வைஷ்ணவ குலத்திற் பிறந்தவர்கள் வசை கூற ப்ரஸக்தியே கிடையாது. திருவயிந்திரபுரத்திலே இது நடந்ததாக எழுதி யிருப்பதைக் கண்டவுடனே, அவ்வூர் தங்களுக்கே அஸாதாரணமென்றும், டைகலையார்தாம் அவ்வூர் கடகாலில் பிறந்தவர்களென்றும், உத்தம ஸ்ரீ வைஷ்ணவர்கள் அருவருத்து விலகும்படியான கேவல ப்ராஹ்மண்யம் தங்களுக்கே யுள்ளதென்றும் முடிவுசெய்து தங்களுக்குத் திரஸ்காரமாக இவ்விதிஹாஸம் எழுதப்பட்டதென்று மருண்ட யயாஜாதர் சீற்றத்தின் மேலெல்லையிலே நின்று இதை தூஷிக்குமிடத்து "உறவறுத்து என்று காண்பது அதிக ப்ரசங்கமேயாம்." என்றும், "மூலத்தில் இல்லாத விஷயத்தைச் சண்டைக்கு ஒரு மூலமாக்கினது என்னே! என்பதை நன்கு நோக்கவேணும்'' என்றும், "ஏகாந்தமாகத் தபோநுஷ்டானத்திற்குப் பாங்கான நிலத்திலே ஸ்வாமி தேசிகன் எழுந்தருளியிருந்த நிலத்திலே ஸாத்விகோத்தமர்களாய் அவரடியார்கள் வாழுமிடமும் சென்று வலியச் சண்டைக்கு வழி கோரி ஸூத்ரத்திற்குப் பொருள் கூறி யிருக்குமழகைப் பாருங்கள்'' என்றும் எழுதி, முடிவில் வெகு அதிக ப்ரஸங்கமாக எழுதியிருப்பதாவது—

"ஆசார்யஹ்ருதயம் என்கிற நூலானும், அதற்கு உரையெழுதிய மாமுனிகளாலும், அந்த உரைக்கு விளக்கம் தந்த இவராலும் (ப்ர—அ.), தென்கலை வடகலை வித்யாசம் உண்டு என்று அம்பலப்படுத்த முன்வந்திருப்பதை நினைப்பின் என்னே இவரதுபணி என்று எண்ணவேண்டியிருக்கிறது'' என்பது.

முடிவாகக் கேண்மின். வில்லிபுத்தூர்ப் பகவர்வார்த்தை எக்காலத்தது, யாரை இலக்காகக் கொண்டது என்பது முன்னுபந்யாஸத்தில் விளக்கப்பட்டதாயிற்று. அந்த மெய்ம்மைப் பெருவார்த்தை அவதரித்த காலத்தில் தேசிகனுமில்லை, அவரடியார்களுமில்லை என்பது தூஷகரும் இசைந்து தீரவேண்டியதாயிற்று. இவர்களுக்கு எப்போதும் தென்னாசார்ய தூஷணமொன்றிலேயே நோக்காதலாலும், அதைச் செய்வதுதான் மஹத்தான தேசிககைங்கர்யமென்றிருப்பவர்களாதலாலும் பூர்வாத்மநா தமக்கு நிலமல்லாத ஆசார்ய ஹ்ருதயத்திலே கைவைத்து, இத்தகைய கீழ் வெட்டுகளை நெஞ்சாலும் நினையாத ஸதாசார்யர்களை வலியப் பிடித்திழுத்து தூஷிப்பது இவர்களுக்கே தகும்.

தன்னுடைய மனைவியிடத்தில் கோபதாபங்கொண்ட வொருவன் அவள் தலையிலே பாறையைப் புரட்டிப் போடவேணுமென்று போகையில் வியாகரணம் வாசிக்கிற வொரு வித்யார்த்தி * ஷீஹெஹ்ராஜக: * என்கிற பாணினிஸூத்ரத்தை உரக்கச் சொல்லி யுருப் போட்டுக் கொண்டிருந்ததைப் பார்த்து 'இந்த பண்டிதர் நமக்கு நல்ல ப்ரமாணம் காட்டுகிறார்' என்று சொல்லி விழுந்துவிழுந்து கும்பிடுகிறானுமவனை. * ஷீஹெஹ்ராஜக: * என்கிற ஸூத்ரத்திற்கு ஸ்திரீகள் தலையிலே பாறையைப் புரட்டவேண்டியதென்று அவர்கொண்ட அர்த்தம். அப்படியே இவர் கொண்டது "ஆசார்ய ஹ்ருதய—தத்வ்யாக்யானங்கள் வடகலையார் மேலே பாறையைப் புரட்டச் சொல்லுகின்றன'' என்பது.

"காரஸிகெஷ—வ ஹத—த்தி நிவெத நம ஶிரஸி ஜாஜ்வ ஜாஜ்வ ஜாஜ்வ." (3)

---

## 4. திருவயிந்திரபுரத்தவர் திருமங்கையாழ்வார்மேல் அப்புதொடுத்தது

திருவயிந்திரபுரத்தில் ஒரு வைஷ்ணவர் என்னிடம் சொன்னவை;— 'ஏன் ஸ்வாமீ! திருமங்கையாழ்வாருக்கு எங்கள் ஊரில் என்ன அவ்வளவு மாச்சரியம்! தேவரீரே ஆலோசிக்க; எங்களூருக்கு முன்னே திருக்கோவலூரைப் பாடினர், பின்னே சித்ர கூடத்தைப் பாடினர். "தூய நான் மறையாளர் சோமுச் செய்ய" "வந்தனை செய் திசையேழாறங்கம் ஐந்து வளர் வேள்வி நான்மறைகள் மூன்று தீயும்" "மறைவளரப் புகழ் வளர மாடந்தோறும் மண்டபமொண் டொளியனைத்தும் வாரமோத"="வாயோது வேதம் மலிகின்ற தொல்சீர்மறையாளர் நாளும் முறையால் வளர்த்த தீயோங்க வோங்கப் புகழோங்கு" என்று பிரம்மாண்டமான பாசுரங்களாலே அவ்விரண்டு திவ்ய தேசங்களிலும் மஹா வித்வான்களும் அநுஷ்டாதாக்களும் மலிந்திருப்பதாகப் பாடிவிட்டு, எங்கள் ஊரில் * குதி கொடு குரக்கினமிரைத் தோடி * என்று குரங்குகள் இரைச்சல் போட்டுக் கொண்டு ஓடுவதாகவும், கரும்பு முனைத்து ஆகாசம் வரை ஓங்கியிருப்பதாகவும்....இப்படி வம்பு பேசி விட்டுப்போய்விட்டாரே ஆழ்வார். எங்கள் ஊரில் * அகில புவனாதாரா * அமரா நிர்ஜரா தேவா கூட தெரிந்தவன் கிடையாது, சந்தியாவந்தனம் பண்ணுகிறவன்கூட கிடையாது என்னும்படி கழனிகளையும் கலங்களையும் பேசிவிட்டுப் போய்விட்டாரே; தவிரவும், நதிகளுள்ள தலங்களைப் பாடும்போது "பெண்ணைத் தென்பால்" என்றும் "பெருநீர் நிவாவுந்தி முத்தம் கொணர்ந்து" என்றும் "மண்ணியின் தென்பால்" என்றும் "தடமண்ணித் தென் கரை மேல்" என்றும் "கங்கையின் கரைமேல்" என்றும் "தேறுநீர்ப் பம்பை வடபாலைத் திருவண் வண்டூர்" என்றும் "பொருநல் வடகரைவண் தொலைவில்லிமங்கலம்" என்றும் இப்படியெல்லாம் ஆச்சரியமாகப் பாடுகிறார்கள்; எங்களூரில் கோவில் வாசலில் ஆனந்தமாக கருடநதி பெருகுகிறது; அதன் பெயரைத் தொடவேயில்லை ஆழ்வார். * செழுநதி வயல்புகு * என்று அநாமதேயமானவொரு நதி கழனிகளுக்குப் பாய்கிற தென்கிறார். இதுவும் தவிர "தேவர் தானவர் சென்று சென்றிறைஞ்ச தண் திருவயிந்திரபுரத்து" என்கிறாழ்வார்; முன்பு இறைஞ்சினவர்கள் தேவர்களாம்; இப்போது இறைஞ்சுகிறவர்கள் தானவர்களாம். இப்படி யெல்லாமல்லவா எங்களுருக்குப் பாட்டுபாடியிருக்கிறார். இவ்வாழ்வார் தலையில் நாங்கள் என்ன பாறையைப் புரட்டினோம். ஸ்ரீரங்கத்தைப்பாடின பெரியாழ்வார் * தோதவத்தித்தூய்மறையோர் துறைபடிய * என்று அங்குள்ள வைதிகர்கள் திருக்காவேரித்துறைகளிலே அனுஷ்டானம்பண்ணுமழகை ஆச்சரியமாக வருணித்தார்; நாங்கள் இங்கே கருடநதியிலே அனுஷ்டானம் பண்ணுமழகைத் திருமங்கையாழ்வார் பாடினால் குடிகெட்டுப்போய்விடுமா? இவ்வூரிலுள்ளாரடங்கலும் சுண்டக்காயர்களென்றுதானே அவர் எண்ணிவிட்டார்! இவ்வூரில் இவருக்கு என் இவ்வளவு மாச்சரியம்? தேசிகப்ரபாவம் திகழுமூர் என்று தானே இவ்வளவு பகை பாராட்டிப் பேசினார். இந்தப் பாட்டுக்களை எங்களூரிலும் சில ஜடங்கள் கத்துகிறதுகள். இது எனக்குப் பிடிக்கவில்லை.—இத்யாதி.

இப்படி அஸ்தானே அழுகிறவர்களோடு சேர்ந்து அழுகிறவராயிற்று இவர். ஆசார்ய ஹ்ருதயம் திருவயிந்திர புரத்தாரை தூஷிப்பதற்காகவே தோன்றியதென்று ரெங்கவீதாசாரியர் சொல்லிக்கொண்டிருந்தது இப்போது தச்சிஷ்யரால் வெளிப்பட்டுவிட்டது. மர்மத்தைக் கண்டறிந்து வெளியிடுகிற மேதாவிலாஸம் இவர்களுக்கே அஸாதாரணம்.

ஆசார்யஹ்ருதயதூஷணத்திற்குக் கண்டனமான நான்கு உபந்யாஸங்கள் முடிந்தன.

---

## 5. வழங்கியுந்தான் மிக விளங்கும்.

அடைக்கலப்பத்தில் (பா. 7-ல்) "வழங்கியுந்தாம் மிகவிளங்கும்" என்று படித்தும் அச்சிட்டும் வருகிறார்கள். இது அசடான பாடம்; அஸம்பத்தமான பாடம். "வழங்கியும் தாம் மிக வெள்கும்" என்பதே உண்மையான பாடம். ஸ்ரீ குணரத்நகோசத்தில் * ஐஶ்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா கஸ்மைசிதஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய । அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதமித்யதாம்ப த்வம் லஜ்ஜஸே = ஐச்வர்யமக்ஷரகதிம் பரமம் பதம் வா கஸ்மைசிதஞ்ஜலிபரம் வஹதே விதீர்ய, அஸ்மை ந கிஞ்சிதுசிதம் க்ருதமித்யதாம்ப த்வம் லஜ்ஜஸே. * என்று பட்டர் அருளிச்செய்திருப்பதை நோக்கி ரஸித்து அதே சாயையில் அமைத்த பாட்டு இது. 'வழங்கியும்' என்று உம்மையில்லாமல் * வழங்கித்தாம் மிகவிளங்கும் * என்று பாடமிருந்திருக்குமானால் தொலைபட்டுமென்று விட்டுவிடலாம். உம்மை நிரர்த்தகமாகும்படி விளங்குமென்றுள்ள பாடம் ஒவ்வாது; இந்த உம்மையை ஸார்த்தகமாக்கவேண்டி இரண்டாமடியின் முடிவில் ஓர் உம்மையைப் புதிதாகச் சேர்த்திருப்பது ஸாஹஸம் என்பதோடு விரஸமுமாகும்—என்று பலவருஷங்களுக்கு முன் நம்மால் வெளியிடப்பட்டவிது ஸ்ரீ. உ. வே. கோஷ்டீபுரம் ஸௌம்யநாராயணாசார்ய ஸ்வாமி, (மாம்பலம்) வாஸுதேவாசார்ய மஹர்ஷி முதலான நிர்மத்ஸர வித்வத்வரிஷ்டர்களால் மிகமிக ஆமோதிக்கப்பட்டுமுள்ளது. ஸிவம்ஹதர்களான அவர்கள் நிற்க; வடகலையார்களில் ஸ்ரீ. உ. வே. உப்பிலியப்பன் ஸன்னிதி நவநீதம் ஸ்ரீராம தேசிகரால் அளவுகடந்து அபிநந்திக்கப்பட்டது இது இதெல்லாம் பண்டே விரிவாக வெளியிடப்பட்டுள்ள விஷயமாதலால் இப்போது விரிவு வேண்டா.

இப்போது ப்ரபலதூஷணங்களுக்குக் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பவர் எழுதுகிறார்—

"வழங்கியும் தான் மிகவிளங்குமென்கிற பாடம் அநுபபந்நமாம்; மிக வெள்கும் என்பது சரியாம். 'கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாம் தருவன்' என்ற ஆழ்வாருளிய ஆழ்பொருளை உள்ளத்தே கொண்டால் மிக விளங்குமென்றபாடத்தில் என்ன குறைவருமோ? 'தான் மிக வெள்கும்' என்று சொல்வதின் நோக்கம் வேறு. ஒருதரம் சேவித்தாலே பரமன் கடனாளியாய் விடுகிறானென்று சொல்லுமிவருடைய மதத்தவர் கொள்கைப் படிக்கு ஒருதரத்திற்குமேல் சேவிப்பவர்கள் விஷயத்தில் தன்கையில் கொடுக்க ஒன்றுமில்லையே யென்று வெள்கித்தானாக வேணும் பரமனென்பது இவரபிப்ராய மாதலால் இவருடைய மதக்கொள்கைக்கு ஒத்துவரவும், அதனால் தேசிகன் தென்கலை யென்று எழுதவும் வடகலை ஸம்ப்ரதாய ஸ்ரீ கோசங்களைத் திருத்தவும் முற்படுகிறார்; இவரெழுதும் சுவடிகளில் தேசிகன் தென்கலை யென்கிறார். தேசிக ஸூக்திகள் தமக்கே யென்கிறார். ஆனால் தேசிகப்ரபந்தாநுசந்தானத்தை இவரோ இவருடைய சமயத்தினரோ செய்வதில்லை." என்று.

இதற்கு மேலும் இவர் சில வாக்கியங்களை யெழுதியிருக்கவேண்டும்; மறு பதிப்பிலாவது சேர்க்கட்டுமென்று இங்கே காட்டுகிறோம். "தேசிகப்ரபந்தாநு சந்தானத்தை இவரோ இவருடைய சமயத்தினரோ செய்வதில்லை" என்றதற்குப்பின் "தேசிகபக்தர்கள் அதைச் செய்தாலும் அவர்கள்மீது கோபதாபங்களைக் காட்டிச் சண்டை போடவும் வருகிறார்கள்; கோர்ட்டில் தாவா செய்து தடையுத்தரவு பிறப்பிக்கிறார்கள். உத்தரவை மீறிச் சொன்னதாக ரூபித்து தண்டனையும் பெறுவிக்கிறார்கள்" என்று இங்ஙனே இன்னும் பலவாக்கியங்களையும்

சேர்த்தால்தான் விஷயம் பரிமளிக்கும். இது நிற்க. இவ்விஷயத்தில் க்ரமேண மூன்று நான்கு உபந்யாஸங்கள் அவதரிக்கும். ஒவ்வொன்றும் ரஸிகர்களின் அவதானத்திற்கு உரியவை யாதலாலும் மிகச்சிறந்த தத்துவங்கள் தெரியவருமாதலாலும் இவ்வுபந்யாஸங்களை உத்ஸாஹத்தோடு உரைக்கின்றேன். ஸஹ்ருதயர்கள் சோம்பலைவிட்டு வாசித்துப் பயன் பெறுக. முதலில் ஒரு சிறு கதை கேண்மின்.

ஓர் ஊரில் ஒரு ஸ்வாமி விசேஷமான நெல்மூட்டைகளை வாங்கி உள்ளே அடுக்கி வைத்திருக்கிறார். நெல் விலை ஏறுங்காலத்தில் விற்பனைசெய்து விசேஷ லாபமடைய வேணு மென்பது அவர் கருத்து. இப்படி யிருக்கையில், ஒருநாள் ஒரு ஸ்வாமி அவருடைய க்ருஹத்திற்கு அதிதியாகவந்தார். இரவில் வாசல் திண்ணையில் சயனித்துத் தூங்க ஆரம்பித்தார். விட்டுக்காரர் உள்ளே கூடத்தில் படுத்திருக்கிறார். வாசலில் சயனித்திருக்கும் அதிதிக்குக் கொசுக்கடி தாங்கமுடியவில்லை. அதனால் மிகவும் கஷ்டப்படுகிறார். உள்ளிருக்கும் க்ருஹஸ்வாமியைக் கூப்பிட்டு 'ஸ்வாமின்! இங்கு கொசுக்கடி பொறுக்க முடியவில்லையே! என் செய்வது!' என்றார். அதற்கு அவர், "ஓய்! கொசு கடித்தாலும் ஸரி, பாம்பு பிடுங்கினாலும் ஸரி; இப்போது நான் நெல்லை விற்கமாட்டேன்" என்கிறார். அது இவர்க்கு அர்த்தமாகவில்லை; என்ன என்ன? என்கிறார்; உம்முடைய சூது எனக்குத் தெரியுங்காணும் என்கிறாரவர். அன்பர்களே! இவ்விஷயம் உங்களுக்குப் புலப்படுகிறதோ? விவரிக்கிறேன், கேண்மின். "கொசு பெருத்தால் மழை பெருக்கும்; மழை பெருத்தால் நெல்விலை இறங்கும்" என்றொரு பழமொழியாம். அவ்விட்டுக்கு வந்தவர் உண்மையாகக் கொசுக்கடியினால் வருந்திக் கதறினாரேயொழிய வேறு சூது எதுவு மறியார். மேலே காட்டின பழமொழியையும் அவர் அறியார். வீட்டுக்காரருக்கு நெல்விற்பனையிலும், அதிலும் விலையையேற்றி விற்பதிலுமே ஸதா சிந்தனையாகையாலே, வாசலில் கொசுக்கடி யென்று கத்துகிறவர் 'கொசு மலிந்திருப்பதாலே மழை பெய்துவிடும், மழை பெய்தால் நெல்விலை குறைந்துவிடும்; ஆகையால் இப்போதே வந்தவிலைக்கு நெல்லை விற்றுவிடுவதுநலமென்று ஸூசனை செய்கிறார் என்று க்ரஹித்துக்கொண்டு அதிதி நெஞ்சிலுமெண்ணாததை யெல்லாம் கொட்டிவிட்டார்.

ப்ரக்ருதத்தில் இந்த தூஷகர்க்கு உண்டான எண்ணம் என்னவென்றால்; அதை நாம் அநுமானிக்கவேண்டாதபடி தாமே வ்யக்தமாக எழுதியுள்ளார். 'மிக வெள்கும்' என்பதாகப் பாடத்தைத் திருத்திவிட்டால் அது தென்னாசார்ய ஸம்பிரதாயத்திற்கு மிகவுமொத்திருக்குமாம். "ஒரு தரம் சேவித்தாலே பரமன் கடனாளியாய் விடுகிறானென்று சொல்லுமிவருடைய மதக் கொள்கைக்கு ஒத்துவரவும் அதனால் தேசிகன் தென்கலை யென்று எழுதவும் இதற்காகப் பாடத்தைத் திருத்தவும் முற்படுகிறார்" என்று எழுதியுள்ளார். *ஜூா நவஷ-ஷி-உ ஜ0 ஸூஹாவி நாா0 நாஜூயதி* என்றதற்கு ப்ரதமலக்ஷ்யமாகப் பிறந்த இவர்க்கு, விவாத வாக்கியம் வந்த பாட்டிலுள்ளதோ அந்த பாட்டின் முன்னடிகளைக் காணக் கண்ணில்லையே. "உமதடிகளடைகின்றே னென்றொருகாலுரைத்தவரை அமையுமினியென்பவர்போல் அஞ்சலெனக் கரம் வைத்து" என்றன்றோ முன்னடிகள். தேவப்பெருமாளுடைய ஸ்ரீஹஸ்தமுத்ரையானது, உலகத்தில் போதும் போதும் என்று சொல்ல நினைப்பவர்கள் காட்டும் ஹஸ்தமுத்ரையாக விருக்கின்றதென்று சொல்லியுள்ளார். அமையும் என்பதற்கு போதும் என்று அர்த்தம். ததீயாராதந கோஷ்டியில் ஒரு தடவை பரிமாறின போஜ்யத்தை மறுமுறையும் பரிமாறப்புகுந்தால் இஷ்டமில்லாதவர்கள் வேண்டா

மென்று வாயாற் சொல்லுவதுமுண்டு; மஹர்ஷிகள் கையை அமர்த்தி அதனால் தெரிவித்துவிடுவதுமுண்டு. பேசாப்பெருமாள் "என் திருவுள்ளம் கன்றும்படி நீங்கள் அதிப்ரவ்ருத்தி செய்யவேண்டாம்" என்பதை ஹஸ்தமுத்ரையினால் காட்டுவதாக தேசிகன் தாமே கூறியுள்ளார். பேரருளாளன் விஷயத்தில் இப்படிச் சொன்னது போலவே ஸ்ரீரங்கநாதன் விஷயத்திலும் "வௌநஃ வாநஃ" என்று ச்லோகமாகச் சொல்லிவைத்தார். இவை உத்ப்ரேக்ஷதானே யென்னவொண்ணாது; அஸாஸ்த்ரீயமான அர்த்தமாயிருந்தால் அதை உத்ப்ரேக்ஷாப்ரணாளியிலுங்கூட உரைக்க லாகாதன்றோ. அபீதிஸ்தவத்தில் இரண்டாம் சுலோகத்தில் "[illegible]" என்று உத்ப்ரேக்ஷாப்ரஸங்கமின்றிக்கே [illegible]மாகவே பேசியுள்ளார். 'ஒருமுறை ப்ரபத்தி செய்பவர்களைத்தான் ரக்ஷிப்பேன்' என்று ஸ்ரீரங்கநாதன் ப்ரதிஜ்ஞை கொண்டிருப்பதாக நிஸ்ஸந்தேஹமாய் ஸாதித்துள்ளார். இதற்கு வேறு பொருளுண்டாகில் தாராளமாக எடுத்துரைக்கலாம். மற்றதெல்லாம் ஒரு புறமிருக்க, "வேள்கும்" என்கிற பாடம் தென்கலை ஸம்ப்ரதாயத்திற்குத்தான் சேருமென்று எழுதி முடித்தவிவர் "த்வம் லஜ்ஜஸே" என்று ஸாதித்த பட்டரைத் தென்னாசாரியர்களில் தலைவராக எழுதி முடித்தாராயிற்று. .... .... .... (5)

## 6. கொள்ளக் குறைவிலன்=அபார்த்த நிரஸநம்.

இந்த ப்ரஸங்கத்திலே * கொள்ளக்குறைவிலன் * என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை யெடுத்துக்காட்டி இதன் ஆழ்பொருளை உள்ளத்தே கொள்ளவேணுமென்கிறார். "அருளிச் செயல் பொருள்களை யறிந்தவரிவர்" என்று சிலர் கொண்டிருந்ததை மருளாக ஆக்கியொழிப்பதற்கு நல்லவழி தேடிக் கொண்டார். யானை தன் தலைமேல் தானே மண்ணை வாரிப்போட்டுக் கொள்ளுகிற கதையே இது. "கொள்ளக் குறைவிலன்" என்பதற்கு இந்த அரஸிகபுஞ்ஜம் கொண்ட பொருள் யாதெனில், கொள்ளக் கொள்ளக் குறைவு இல்லாதவன்—(அதாவது) யாசகர்கள் அபரிமிதமாகப் பெற்றுப் போனாலும் செல்வம் குறையாதபடி அபரிமிதமான செல்வமுடையவன் என்று இவர் கொண்டபொருள். "வழங்கிருந்தான் மிக விளங்கும்" என்ற பாடத்திற்கு இந்த பாசுரம் பொருத்தமான ப்ரமாணமாம். தேவப்பெருமாள் அடியார்களுக்கு எவ்வளவு வழங்கினாலும் குறையாதே விளங்கிக் கொண்டிருக்கிறானென்று அர்த்தமாம். இந்தப் பாட்டுக்கு இவர் எப்படி பொருள் கொண்டாலும் எப்படி பாடம் கொண்டாலும் கேட்பாரில்லை. * கொள்ளக் குறைவிலன் * என்கிற ஆழ்வார் பாசுரத்திற்கு இவர் கொண்ட அவலக்ஷணப் பொருள் 'அருளிச் செயலுக்கு அறுபதினாயிரம் காதங்களுக்கு அப்பால் இவர் நிற்கவேண்டியவர்' என்று ஸ்தாபித்துத்தரும். சிறந்த நிதி காட்டுகிறோம் காண்மின்;

நம்முடைய திவ்ய ப்ரபந்த திவ்யார்த்த தீபிகையை அல்லும் பகலும் அநவரதமும் சிந்தை செய்து கொண்டேயிருக்குமிவர்க்கு நிதியுள்ளவிடம் தெரிய வழியில்லையாயிற்று. * கொள்ளக்குறைவிலன் * என்ற (3-9-5) திருவாய்மொழிப் பாசுரத்தின் திவ்யார்த்த தீபிகையில் நாமெழுதியுள்ளவாக்கியங்கள் இவை காணீர்—

"கொள்ளக்குறைவிலன்=இதற்கு ஸாமாந்யமாகத் தோன்றும் கருத்து ஒன்றுண்டு; மிக அற்பர்களிடத்திலே நாம் பலன் கொள்ளக் கொள்ள அவர்களுக்கு அது

குறைந்து போம்; அங்ஙனன்றிக்கே எம்பெருமான் அழியாப் பெருஞ் செல்வமுடையனாதலால் நாம் அவன் பக்கல் எவ்வளவு செல்வம் கொண்டாலும் அங்குச் சிறிதும் குறை ஏற்படாது என்பதாக; இது மிகவும் அஸங்கதமான பொருள். நம் ஆசாரியர்கள் அருளிச் செய்வது இங்ஙனேயன்று; 'நீங்கள் யாவை யாவை சில ஏற்றங்களையிட்டுக் கவி பாடினீகோள் அவற்றை ஸ்வீகரிக்குமிடத்தில் ஒரு குறையுடையவனல்லன்' என்பது பூருவர்களின் ஸ்ரீ ஸூக்தி. அற்பமனிசர் விஷயத்திலே ஏற்றங்களை ஏறிட்டுக் கவிபாடினால் அவற்றைக் கொள்ளும்படியான பூர்த்தி அவர்களுக்குக் கிடையாது. அவர்களிடத்தில் இல்லாதவையாதலால். எம்பெருமான் விஷயத்தில் எவ்வளவு ஏற்றமாகக் கவி பாடினாலும் அந்த ஏற்றமெல்லாம் அங்கே மிகவும் பொருத்தமாக அந்வயிக்கக் குறையில்லை—என்றவாறு."

என்று இவ்வளவு விவரித்து எழுதியிருந்தும் குருடன் கிணற்றிலே விழுமா போலே விழுந்தாரிவர். "பகற்கண்ட குழியிலே இரா விழுவாரைப் போலே" என்று ஆசார்யர்கள் ஸாதித்ததுண்டு. பகற்கண்ட குழியிலே பகலிலேயே விழுந்தாரிவர் அந்தோ!. இப்பொருளை ஆறாயிரப்படியில் எவ்வளவு அழகாக அருளியுள்ளார் தெரியுமோ? இவர்க்கு உத்தேச்யரான ஸாக்ஷாத்ஸ்வாமியும் இங்கு அபார்த்த முரைத்திலர். உள்ளபடி விவரித்துள்ளார்.

உபநிஷத்பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி அந்த உபநிஷத்தோடு நின்று த்ரமிடோபநிஷத்தில் கைவைத்திருக்கக் கூடாது; *ஆதியஞ்சோதியுருவை அங்கு வைத்திங்குப் பிறந்த* எல்லீரும் வீடு பெற்றாலுலகில்லை யென்றே* இத்யாதி ஸ்தலங்களில் சருக்கி விழுந்ததுபோலவே இங்கும் சருக்கி விழுந்தொழிந்தார். "ஹவெ ஷீகீயஹாணெ சக்ஷுயூ ஹாஂபவக நகூ நதாஶ நகூ" என்று இவர்க்கு அப்பனுயெழுதி வைத்தார். ஆக்ருத ஸ்தலத்திற்கு இப்பொருள் சிறிதும் ஏலாது. இந்த தூஷகர் மூலத்தையே தவறாக உதாஹரிப்பவர். "வேண்டிற்றெல்லாம் தரும்" என்பதை தருவன் என்கிறார் அஸக்ருத். * தீயோம்பு கைமறையோர் * என்கிற பாசுரத்தை "தீயோம்பு புகை மறையோர்" என்கிறார். தீ வந்தால் புகை வரவேணுமே என்று எண்ணி விட்டார். இத்தகைய தவறுகளை எடுத்துக் காட்டப் புகுந்தால் ஸத்யமாய்ப் பெரிய புராணமாகும். மூலத்திலேயே முழுமோசமான இப்பேர்வழி அர்த்தத்திலே மோசம் போவதில் ஆச்சரிய மென்கொல்?

பிறர் எவ்வளவு கொண்டாலும் குறையுறுதவன் என்கிற ஏற்றம் எம்பெருமானுக்கு இல்லை யென்று யாரும் சொல்லார், நினையார். இதற்கு இது இடமன்று. அப்பயதீக்ஷிதர் குவலயாநந்த மங்கல ச்லோகமிட்டிருக்கிறார்—"உத்காட்ய யோககலயா ஹ்ருதயாப்ஜகோஶம் தந்யைஶ்சிராதபி யதாருசி க்ருஹ்யமாண: । ய: ப்ரஸ்புரத்யவிரதம் பரிபூர்ணரூப: ஶ்ரேய: ஸ மே திஶது ஶாஶ்வதிகம் முகுந்த:." என்று; அதை யெடுத்துக்காட்டினால் அபத்த பாடம் ஒருவாறு பொருந்தும். அதற்கிவர் பிறக்கவில்லை. எதற்கும் பிறக்கவில்லை. * அபத்தம் படித்வாக்ஷ வொதஷ்யம் கரோதிக்குப் பிறந்தாரத்தனை. .... ... (6)

## 7. தேசிகனுடைய உண்மைஸ்வரூபம்.

இந்த ப்ரகரணத்தில் இவர் பித்துக் கொள்ளியாய்ப் பன்முறையும் எழுதுகிறார். என்னவென்றால், "இவர் (ப்ர—அ) எழுதும் சுவடிகளில் தேசிகன் தென்கலை யென்கிறார்; தேசிக ஸ்ரீ ஸூக்திகள் தமக்கே யென்கிறார்; தேசிக ப்ரபந்தாநுஸந்தானத்தை இவரோ

இவருடைய சமயத்தினரோ செய்வதில்லை" இத்யாதி. இந்த அசட்டு வார்த்தைகளுக்கும் ஆர அமர விடையிறுப்போம். "தேசிகனைத் தென்கலையென்கிறார்" என்கிற வார்த்தைக்கு இருவகையாகப் பொருள் தேறும். இக்காலத்தில் தென்கலைத் திருமண் என்று வழங்கப் படுகிற ஊர்த்வபுண்ட்ராகாரமணிந்தவர் என்பதாகப் பொருள் ஒன்று. தென்கலை ஸம்பிர தாயத்தில் ஆதரிக்கப்படுகிற அர்த்தங்களையே தேசிகனு மாதரித்தவர்—என்பதான பொருள் மற்றொன்று. ப்ரக்ருதம் அர்த்த விசாரமாதலால் புண்ட்ர ஆஸ்தாவத்தை விட்டிடுவது. ஸ்ரீமந்நாத முனிகள் தொடங்கி ஆளவந்தார் எம்பெருமானார் ஆழ்வான் பட்டர் நம்பிள்ளை பிள்ளை லோகாசாரியர் முதலான பூருவாசாரியர்கள் ஆதரித்த அர்த்த விசேஷங்களே தென்னாசார்ய ஸம்ப்ரதாயார்த்தமெனப்படுவது. தேசிகன் ஆதரித்த அர்த்த ராசிகளும் பெரும்பாலும் அவையே யாதலாலும், ஸத்ஸம்ப்ரதாயார்த்த ஸாரநிதியென்கிற மணிப்ரவாள நூலினாலும் ஸித்தாந்த ஸௌபாக்ய மென்கிற ஸம்ஸ்க்ருத க்ரந்தத்தின் விபுலமான த்விதீய பரிச்சேதத்தினாலும் பிறர் சிறிதும் அசைக்கவுமொண்ணாதபடி இதனை நன்கு ஸ்தாபித் திருக்கிறோமாதலாலும் 'விளங்கு' மென்பதை வெள்குமென்று திருத்தி இதனால் ஸாதிக்கக் கூடியது எதுமில்லை. அவ்விரண்டு நூல்களுக்குமிவர் விடையிறுத்தாகவேண்டும்.

இனி புண்ட்ர விஷயத்தை யெடுத்துக் கொண்டாலோ, இதில் நம்முடைய நூற்றுக் கணக்கான நிரூபணங்களெல்லாம் ஒரு தட்டாய், ஸேவா பத்ரிகை வெளியிட்டிருக்கிற தேசிக திவ்யமங்கள விக்ரஹ ப்ரதிக்ருதி ஒரு தட்டாயிருக்கையாலே இதில்தான் நமக்கு என்ன ப்ரயாஸமுள்ளது. இதுதான் உலகமெல்லாம் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயம்.

தேசிகன் விபவகாலத்தில் அணிந்து கொண்டிருந்ததும் தென்கலைத் திருமண்தான், அர்ச்சையிலும் எழுபத்தைந்து வருஷங்களுக்கு முன் வரையில் அணிந்து கொண்டிருந்தது தென்கலைத் திருமண்தான்—என்பதை இவர்கள் உச்சிமேல் வைத்து மெச்சுகின்ற ஸேவா பத்ரிகையன்றோ கல்வெட்டாக்கி யிருக்கின்றது. ஸேவா பத்ரிகையின் 1955ஆு ஆகஸ்டு மாத ஸஞ்சிகையின் மேலட்டையைப் பாருங்கள். தீபப்ரகாச ஸ்வாமியையும் அவருடைய திருவடிவாரத்தில் தேசிகனையும் படமெடுத்திருந்ததை ப்ளாக் செய்து பிரசுரம் செய்திருக் கிறது அந்த ஸஞ்சிகையில். கீழே விளக்கொளியும் வேதாந்த தேசிகனும் என்று கொட்டை யெழுத்தில் போட்டிருக்கிறார்கள். தேசிகன் திருநெற்றியிலே எவ்விதமான புண்ட்ரமிருக் கிறதென்பதை ஊன்றிப்பாராமல் மேலெழுந்தபடியாகப் பார்த்தாலும் போதும். அது வெளி வந்த காலத்தில் அதைக்கண்ட வொரு வடகலைவைணவர் வயிறெரிந்து எழுதி அச்சிட்டு வெளியிட்டிருப்பதையும் இங்கு உதாஹரிக்கிறேன்;

"ஐயையோ! குடிகெட்டு விட்டதே; மூக்கில் முழ நீளம் இழுத்திருக்கிறதே; இரண்டு காலும் வெகு பட்டையாயிருக்கிறதே. இதென்ன விபரீதம்! இப்போது தேசிகன் திருநெற்றியில் இப்படியா திருமண்காப்பிருக்கிறது? இது எந்த வருஷத்தில் எடுத்த படம்? என்ன இழவு! இதை எதுக்கு அச்சிட்டுப் பிரசுரம் செய்கிறார்கள்? மருமமென்ன? எனக்கொன்றும் விளங்கவில்லையே. பத்ரிகையின் தலைமேல் பிரளய மான வடகலைத் திருமண். தேசிகன் நெற்றியிலோ கொள்ளை கொள்ளையான தென்கலைத் திருமண். இது என்ன வெட்கக்கேடு. எனக்கு ஒன்றுமே தோன்ற வில்லையே. இது என்ன அசட்டுத்தனமான காரியம்! இது யார் செய்தது! இதைக் கண்டும் என் னுயிர் போகாமலிருக்கிறதே."

என்று பொருமிப்பொருமிப் புலம்பியிருக்கிறார். அவருடைய புலம்பல் கிடக்கட்டும். ஸேவா பத்ரிகை 4—2. என்கிற லக்கமுள்ள ஸஞ்சிகை துர்லபமன்று, ஸர்வ ஸுலபம். இந்த ஸேவாவில் தேசிக அஷ்டோத்தர சதநாமாவளி உரையுடன் அச்சிடப்பட்டு வந்தது. அதில் நாற்பத்தேழாவது திருநாமம் 'ஊர்த்வபுண்ட்ராங்கக த்ராதா' என்பதாம். இதற்கு இவர்களுடைய வியாக்கியான மென்னவென்றால், (ஸேவா 4–2.)—

> “ஊர்த்வபுண்ட்ரம் இட்டுக்கொள்ளவேண்டியது அவசியமென்பதை தேசிகன் ஆணித்தரமாய் ஸ்தாபித்தருளினார். புண்ட்ரங்களின் ஆகாரங்கள், அவற்றைப்பற்றிய ஆதாரங்கள், அதிகாரி பேதத்தினாலே புண்ட்ரங்களில் வேற்றுமைகள் இவற்றை வெகு அழகாக நிரூபித்தவர் ஸ்வாமி தேசிகன். ஊர்த்வபுண்ட்ரத்தின் ஆகாரத்தை சாஸ்திரங்கள் பலவாறு சொல்லும். திருமணின் ஆகாரம் என்னவென்று நாம் ஸந்தேஹிக்கவேண்டாம். அதற்காக சாஸ்திரங்களைப் புரட்டவும் வேண்டாம். ஸ்வாமி தேசிகன் திருமுக மண்டலத்தில் இருந்த திருமணாகாரமே நமக்கு பரம்பரையாய் வருகிறது. இதில் வீண்குழப்பம் நமக்கேன்?”

என்று இவர்களுடைய வியாக்கியான பங்க்திகள். தேசிகன் திருமுக மண்டலத்திலிருந்த புண்ட்ராகாரம் இன்னவித மென்று விளக்கிக் காட்டுவதற்காகவே தேசிகனுடைய புராதன மான போட்டோ காபியைத் தேடிப் பிடித்து அதை ப்ளாக்கு செய்வித்துப் பிரசுரம் செய்திருக்கிறார்கள். கி. பி. ௵ 1874 ஆம் ஆண்டில் எடுத்த திருவுருவப்படம் அது. 1880 வரையில் விளக்கொளி ஸன்னிதி கலப்பற்ற தென்கலையாகவே யிருந்தபடியால் அக்காலத்திலெடுத்த திருவுருவப் படம் பலருடைய திருமாளிகைகளில் பரிபாலிக்கப்பட்டு வருகின்றது. அதை ஸேவா பத்ரிகை வெகு ப்ராமாணிகமான முறையில் வெளியிட்டு விட்டது. ஸேவா பத்ராதிபர் குருடரல்லர். அந்த தென்கலைத் திருமண் அவர் கண்ணில் புலப்படாமலிருக்க நியாயமில்லை. எப்படி அவர் இதை வெளியிட்டார் என்று பலரும் அதிசயிக்கும்படியாகவே யிருக்கும். பல வடகலையார்கள் அவரைப் பிடித்துக் கொண்டு “ஓய் அசட்டு ப்ராம்மணரே! கண்மண் தெரியாமல் இப்படிகூட செய்துவைப்பீரா? எதனால் உமக்கு இப்படிப்பட்ட துர்ப்புத்தி விளைந்தது?” என்று கேட்டதற்கு “ஐயோ! நான் என்ன செய்வேன்! நான் தென்கலை பக்ஷபாதியா என்ன? இல்லையே; தேசிகன் திருவுள்ளம் இப்படியிருந்தால் யார் என்ன பண்ணுவது! விபவத்தில் அவர் அணிந்து கொண்டிருந்த புண்ட்ராகாரத்தை நாம் எவ்வளவு அபலபித்தாலும் தெய்வ வசமாக அது தான் வந்து சேர்ந்துவிட்டது. இதை தெய்வச் செயலென்னவேணுமே யொழிய வேறொன்றும் சொல்லத் தெரியவில்லை யெனக்கு” என்று கைகூப்பிச் சொல்லிவிட்டுப் போயினராம். “இப்படிச் சொல்லவில்லையவர்; வேறு விதமாகச் சொன்னார்” என்றால் அதை தாராளமாக எழுதுங்கள். “உடையவரும் கூரத்தாழ்வானும் சேர்ந்து அநாதி வடகலையாயிருந்த கோயிலைத் தென்கலை யாக்கிவிட்டார்கள்” என்று D. T. தாதாசாரியர் கல் வெட்டுச் செய்துமுடித்தார். ஸேவா பத்திரிகைக்காரர் தேசிகனை அஸல் தென்கலைத் திருமண்காப்புடனே பிரசுரப்படுத்திவைத்தார். தேசிகன் தென்கலை தான் என்று ஸ்தாபிக்க நாம் எதுக்குக் கஷ்டப்படவேண்டும். தேசிகன் வடகலை தானென்று நாட்டிவைக்க இவர்கள் வெகு ப்ரயாஸங் கொள்ளுகிறார்கள். அதற்கு மறுப்புரைப்பது ஸத்யமாய் வ்ருதவ்யாஹாரணமேயாகும். அதெல்லாம் எப்படியாவது தொலையட்டும். சென்ன கேசவப்பெருமாள் ஸன்னிதியில் தேசிகன் ஆயிரம் வருஷமாக வடகலையாகவேயிருக்கட்டும். திருவல்லிக்கேணி திருவிந்தளூர் திருநறையூர் ஸ்ரீ பெரும்பூதூர்

முதலான ஸகல திவ்ய தேசங்களிலும் அந்தந்த கோவில்கள் ஏற்பட்ட காலம் முதலாகவே தேசிகன் வடகலையாயிருக்கட்டும். எங்கள் ச்ருஹத்தில் கோயிலாழ்வாரில் அமர்ந்து திருவாராதனம் கண்டருளுகிற தேசிகனும் வடகலையாகவே யிருக்கட்டும். இவ்விடங்களில் த்ரோஹம் செய்தவர்கள் தென்கலையார்களாகவே யிருக்கட்டும். பரமபதத்திலும் தேசிகன் வடகலைத் திருமண் ஜ்வலிக்க நிற்கிறு ரென்று மிருக்கட்டும். திருவவதார ஸ்தல தேசிகனை நிஸ்ஸந்தேஹத் தென்கலையாக ஸேவா பத்ரிகை கண்ணுடியிட்டுக் காட்டியிருக்கிறதே! இது தெய்வச் செயலென்கிறுரே அவர். இதன் கீழ் மனிதச் செயல்களெல்லாம் தொலைய வில்லையா? திருப்புட்குழியப்பா ஸ்வாமியின் வாக்கு மூலமும் ப்ரபலமாக விளங்குகிறது. இதுவே போதும். ... ... .... .... ... (7)

ஏழாவது உபந்யாஸம் முற்றிற்று.



தீபப்ரகாச ஸ்வாமியும் வேதாந்த தேசிகனும்.

இந்த ப்ளாக் நம்முடையதன்று. ஸேவா என்கிற வடகலைப் பத்ரிகை வெளியிட்டது.

## 8. தேசிகப் பிரபந்தாநுஸந்தானம் தென்கலையார் ஏன் செய்வதில்லை?

தென்கலையார் தேசிகபக்தர்களென்பது உண்மையாயிருந்தால் இவர்கள் தேசிகப் பிரபந்தங்களென்று சொல்லப்படுகிற தமிழ்ப்பாட்டுக்களை ஏன் பாடுவதில்லை? பிறர் பாடினாலும் ஆக்ஷேபிக்கிறார்களே! இது ஏன்? இது தேசிகத்வேஷத்தினாலல்லவா? என்பது இவர்களின் பிரசாரம்.' இதில் உண்மையான தத்துவம் கேண்மின். தேசிகன் ரஹஸ்ய நூல்கள் ஸாதித்தபோது அவற்றில் ஒவ்வொரு நூலின் ஆதியந்தங்களிலும் ஒவ்வோரதிகாரத்தின் ஆதியந்தங்களிலும் ஸம்ஸ்க்ருத ச்லோகங்களை எப்படி இட்டிருக்கிறாரோ அப்படியே தமிழ்ப்பாட்டுக்களையும் இட்டிருக்கிறார். தனிப்பிரபந்தமாக ஸ்வாமி எதுவும் பணித்ததில்லை. அப்படி பணித்திருந்தால் முடிவு பாட்டில் தமது திருநாமத்தைப் பேசாமல் விட்டிருக்கவே மாட்டார், இது மறுக்க முடியாத முழு முதற்காரணம். அத்திகிரி மாகாத்மியமென்று ஒரு பிரபந்தம் சொல்லி வருகிறார்களே, அது ஒரு பிரபந்தமாக இட்டதா என்று யாரும் பார்க்கலாம். இதன் உண்மை யென்னவென்றால் ஸ்வாமி தேசிகனுடைய ரஹஸ்ய நூல்களில் ஹஸ்திகிரிமாஹாத்மியமென்பது மொன்று. அதில் வசனங்களும் இடையிடையே பாட்டுக்களும் சேர்ந்துள்ளன. வசனங்களைத் தள்ளிப் பாட்டுக்களைமட்டும் சொல்லும்படி ஸ்வாமி நியமித்திருக்கவில்லை. தேசிக ரஹஸ்யங்களில் தமிழ்ப் பாட்டுக்களிருப்பது போலவே ஸம்ஸ்க்ருத ச்லோகங்களுமிருக்கின்றனவே, அவற்றைத் தனியேயெடுத்து ஸ்தோத்ரபாடமாக அநுஸந்திக்கும் வழக்கம் எங்கேயாவது உண்டோ? ஏனில்லையென்று கேட்டால் இவர்களே என்னபதில் சொல்லுவர்களோ அதே பதில்தான் இத்தமிழ்ப் பிரபந்தங்கள் விஷயத்திலும் சொல்லக்கடவதாகும். கோவிற் சண்டைகளை இவர்கள் கிளப்பினபோது இந்த ரஹஸ்யப்பாட்டுக்களைத் தனிப் பிரபந்தங்களாக்கி அம்ருதரஞ்ஜனி யென்றும் அம்ருதாஸ்வாதினி யென்றும் இங்ஙனே பெயர்களை இவர்களாகக் கல்பித்து ஸேவாகாலத்தில் கொண்டுவரத் தொடங்கினார்கள்.

தென்கலையார் தேசிக பக்தர்களானால் இப்பிரபந்தங்களை ஏன் சொல்லுவதில்லை? என்கிற கேள்வி மிகவும் அசட்டுத் தனமானது. ரஹஸ்யங்களிலுள்ள சுலோகங்களை வடகலையார்கள் ஏன் ஸ்தோத்ர பாடமாகச் சொல்லுவதில்லை? என்கிற கேள்வியிலே இது சாந்தமாகித் தொலையவேண்டியதே. மேலும் தேசிகப் பிரபந்தங்களுக்கு முன்னே அருளாளப் பெருமாளெம்பெருமானாருடைய ஞானஸாரம் பிரமேயஸாரமென்கிற ஆச்சரியமான பிரபந்தங்களும், பிள்ளைப் பெருமாளையங்காருடைய அஷ்டப் பிரபந்தயென்கிற அத்புத பிரபந்தங்களும் அவதரித்திருக்கின்றன. அருளாளப் பெருமாளெம்பெருமானாருடைய திருவம்சத்தார்கள் ஆங்காங்கு மலிந்துள்ளார்கள் சில சில தேவஸ்தானங்கள் அவர்களின் ஆதீனத்திலுமிருக்கின்றன. அவர்கள் ஞானஸாரப்பிரமேய ஸாரங்களைச் சொல்லுவதுண்டோ? சொல்ல நினைத்ததுமில்லை. இதனால் அவர்களுக்கு ஸ்வகுல கூடஸ்தரிடத்தில் த்வேஷமென்று இவர்கள் தாம் கல்பிக்கவேண்டும். தென்னாடு முழுவதிலும் வடகலையார்கள் ஏறக்குறைய நாலாயிரம் பேர்கள் இருப்பர்களென்று வைத்துக்கொள்வோம். அவர்களில் தேசிகப் பிரபந்தமதிகரித்தவர்கள் பத்தெட்டு பேர்கள் கூடத் தேறமாட்டார்கள். கோவில் சண்டை முற்றின இக்காலத்தின்தான் மதுராந்தகத்திலும் திருவுள்ளூரிலும் சிலர் இவற்றை ஓதத் தொடங்கினார்கள். தாராளமாக வோதட்டும்; ஓதாதவர்களை தேசிக த்வேஷிகளென்று சொல்லுவது மிகுந்த ஸாஹஸமும் அசட்டுத்தனமுமாகும். தேவாலயங்களில் புராதன வழக்கமென்ப தொன்றுண்டு. அதை மீறி நடந்து கொள்ள யாருக்கும் உரிமையில்லை. ஸ்வாமி எம்பெருமானார் ஸாதித்த கத்யத்ரயத்தையோ ஆழ்வான் பட்டர் ஸாதித்த ஸ்தவங்களையோ கோவில்களில் ஸேவிப்பாரில்லை. இது த்வேஷகார்யமென்று பாமரரும் பேசார். (8)

எட்டாவது உபந்யாஸம் முற்றிற்று. (தொடரும்.)

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# மெய்ஞ்ஞான மேன்மைவிளக்கம்

என்கிற

# ராமஸாமி ராமாயணம்

## ஞானச்சுடர்விளக்கு கண்டமை கூறல்

1. அடியேன் 19—8—60 தேதியன்று ஓர் ஆப்தரிடம் பேசிக்கொண்டிருக்கையில் அவர்க்கு ஞானச் சுடர்விளக்கென்கிற வொரு புத்தகம் 56 பக்கம் கொண்டது போஸ்டில் கிடைத்தது. மேலே 'From, Ramasami, Madras' என்றிருந்ததை அந்த ஆப்தர் எனக்குக் காட்டி 'இது இன்னாரனுப்பியது' என்று சொல்லிப் பிரித்துப்பார்க்க, அதில் நூலாசிரியரின் பெயரோ, ஊரின் பெயரோ, அச்சுக்கூடத்தின் பெயரோ, தேதிக் குறிப்போ எதுவுமின்றி முகப்பில் "ப்ர. அண்ணங்கராச்சாரியரின் முரண்பாடுகள்" என்றுமட்டுமிருந்தபடியால் இது விவாதச்சுவடியென்று நிச்சயிக்கலாயிற்று. மேலே கண்ட பேர்வழி இதையனுப்பியது மட்டுமேயோ? நூலாசிரியரும் அவரேயோ? என்கிற ஐயமெழுந்தது. உடனே அந்த ஆப்தர் சிலசில பாராக்களையும் பக்கங்களையும் வாசித்துப்பார்த்து 'இது அந்தப் பேர்வழியின் வாக்யசைலியே யென்பதில் இறையும் ஐயமில்லை, குடப்பாம்பில் கையிட்டுரைக்கலாம்; அவருடைய க்ருதிதான்; ஆனால் இப்புத்தகத்தில் சிலவிடங்களில் அவருடைய பெயர் படர்க்கையாக எடுத்தாளப்பட்டுள்ளதனால் இதை யெழுதியவர் அவராக இருக்க நியாயமில்லையே யென்று தோன்றும்; இங்ஙனே தோன்றச் செய்வதற்காகச் செய்திருக்கும் சூதுகளில் இதுவுமொன்று என்பதே உறுதி. இடையிடையே கடைவீதி ப்ரஸங்கங்களும் க்ராம்யபாமரப் பேச்சுக்களும் பலபல காண்கையாலே அஞ்சுபேர்கூடி இஞ்சிபச்சடி பண்ணின கதையாக வேறு சிலரும் இதில் அந்வயித்திருக்கலாமென்று தோன்ற நின்றாலும் அந்தப் பேர்வழியே ப்ரதான கர்த்தா என்பது மறுக்கவோ மறைக்கவோ முடியாதது. ஆனால் பலவகைப்பட்ட பிழைகள் பாராதோறும் மலிந்திருப்பதனால் இவ்வளவு பிழைகள் இடம் பெறுமாறு அந்தப்பேர்வழி எழுதுவாரா? என்றொரு ஸந்தேஹமெழுகின்றது; ஆனாலும் நூலாசிரியர் அவரேயொழிய வேறு யாருமல்லர். பிழைகளைப் பார்க்கும்போது, நாம் இதுவரையில் அவருடைய ஞானத்தில் மருள்கொண்டிருந்தோமென்றல்லது வேறு எதுவும் நினைக்க நியாயமில்லை. அவருடைய சரக்கு அவ்வளவே யென்று கொள்ளவேணுமத்தனை—என்று சொல்லி 56 பக்கங்களையும் இரண்டொரு மணிகாலத்தில் வாசித்து முடித்து அதனை என்னிடம் தந்தார்.

## இப்புத்தகத்தின் தன்மையும் இது ஒளிந்திருந்த உண்மையும்

2. பலவகைப்பட்ட பிழைகள் பாராதோறும் மலிந்திருப்பதாக ஆப்தர் சொன்னது உண்மையே. பாராதோறும் என்றதை வரிதோறும் என்று திருத்தவேணும். 'அண்ணங்கராச்சாரியரின் முரண்பாடுகள்' என்றதற்குச்சேர ஒரு முரண்பாடாவது ருஜுவான வழியில் நிரூபிக்கப்படுகிறதோவென்று பார்த்த

தில் அது ஓரணுவுமில்லை. உலகில் விவேகியென்று பேர்பெற்றவர்க்கு இப்படியும் ஒரு அவிவேக மிருக்குமாவென்று உள்ளமுடைய நேர்ந்தது. அப்புத்தகத்தில் எந்த பக்கத்தை எந்த பாராவை யெடுத்துப் பார்த்தாலும் சிறுவர்களுங் கூடப் பரிஹஸிக்கும்படியான விஷயங்களும் அபரிமிதமான ஆசார்யாபசாரங்களுமொழிய வேறில்லை. இந்த புத்தகத்தில் பக்கம் 21ல் "இவருக்கு மிகவும் ஆப்தராய் திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கும் இளையவல்லி ஸ்வாமி" என்றெழுதியுள்ளார். அவரைக்கொண்டு ருஜுப்படுத்தட்டுமென்றுமெழுதுகிறார். அந்த ஸ்வாமி திருநாடலங்கரித்து ஆறு மாதங்களுக்குமேல் ஆய்விட்டது. 'திருக்குடந்தையில் எழுந்தருளியிருந்த' என்னுமல் எழுந்தருளியிருக்கும் என்றெழுதியிருக்கு மிவருடைய இச்சுவடி 1960 பிறப்பதற்கு முன்னமே அச்சிடப்பட்டதென்று, மறுக்கமுடியாமல் தேறும். "நஞ்சுடமைதானறிந்து நாகம்கரந்துறையும்" என்றபடி உடனே தடியடிவிழுமே யென்று அஞ்சிப் பதுங்கிக்கிடந்து, பாலாரிஷ்டங்களெல்லாம் கழிந்துவிட்டதாக ஒருவாறு தேறி இப்போதுதான் வெளியில் தலைகாட்டத் தொடங்கிற்றுப்போலும். கரந்துறைந்த நாகம் வெளிவந்தால் ஆகவேண்டியது ஆகித்தானே தீரும்.

### நூலாசிரியர் தன் பெயரை வெளியிடாததற்கு உண்மையான காரணம்

3. சிலவாண்டுகட்கு முன்பு மஹாத்மா காந்தியடிகளை ஒருவன் பட்டப் பகலில் நேர்நின்று கொலை செய்தானென்று கேள்விப்படுகிறோம். இராக்காலங்களில் மறைமுகமாயிருந்து கொலை பண்ணுகிறவர்களுங்கூட தவறாமல் அகப்பட்டுக்கொண்டு கஷ்டங்களை யடைந்தே திருகிறார்களென்பதை அவன் அறியாதவனல்லன். நன்கு அறிந்தவனே. தனக்கும் மரணாந்தமான கஷ்டம் தப்பாதென்று நன்றாக அறிந்துவைத்தும் ஏதோ தன்னுடைய வயிற்றெரிச்சல் தாங்கமாட்டாமல் 'நாளைக்கு நேருவது எதுவாவது ஆகட்டும்; இன்று நம் வயிற்றெரிச்சலைத் தீர்த்துக்கொள்ளத்தான் வேண்டும்' என்று துணிந்து தப்புக் காரியத்திற்குத் தயாராயினன். அதேபோல இவரும் தான் வெகுகஷ்டப்பட்டு எழுதுமிந்த திட்டுச்சுவடி அடுத்த க்ஷணத்திலே நீறுநீறாகிப் பாறுபாறாகியொழிந்து தனக்கும் மனக்கேதம் முதலிய கஷ்டங்கள் தவறாது நேரப்போகின்றனவென்பதை ஐயமற அறிந்துவைத்தும் அதிக பொருட்செலவு செய்து அபத்தச் சுவடியை வெளியிட்டதானது—நெடுநாளாகத் தாங்க முடியாமல் வளர்ந்து செல்லுகிற தன் வயிற்றெரிச்சலுக்கு ஒருபோக்குவீடு விட்டேயாகவேணுமென்பதற்காகவே. தாங்கமுடியாத துக்கம் நேரும்போது ஓவென்றுகத்தியழுது ஒருவாறு தரிப்பதுபோன்றதாம் இது. ஆனால் இவர் இதைப் பெயரில்லாமல் வெளியிட்டதேன்? என்றால், ப்ர. அ. ஸ்வாமியைப்பற்றி இவர் வெளியிட்டிருக்கிற ஆங்கில மதிப்புரையில்,

"As can be expected, the (P.B.A.) Swami's powerful personality has been to target for hostile and adverse criticism from several quarters. It must be said to his credit that he never felt vanquished in any verbal warfare and would always have the last word on any subject,—these have been several such,—in a talling manner........" என்று

இவ்வாறாக எழுதியிருப்பதனால் நேர்முகமாக வெளிவருவதற்கு நாணினார் என்பதே தத்துவம். வேறு சிலருடைய பெயரையிட்டு வெளியிட்டால் 56 பக்கங்கொண்ட புத்தகத்தை வெளியிட்ட புகழ் அவர்களைச் சார்ந்துவிடுமேயென்றஞ்சினர். ஆனாலும் நாளடைவில் நூலாசிரியராக வொருவர் வருவர்.

## தெய்வம் இவரைமொக்கக் குலைத்தவாறு காட்டுதல்

4. இவர் மற்றபேர்களைவிட ஸுமாராக எழுதவல்லரே; ஆனாலும் ப்ர. அ. ஸ்வாமியை எதிரிட்டுக்கொண்டு இவர் எழுதப்புகுந்தபடியால் தெய்வம் இவரை மிகவும் மொக்கக் குலைத்திட்டது. ஒன்றுவிடாமல் பாருங்கள். இவரது இந்த சுவடியின் முகப்பிலுள்ளது இது; "இவருடைய விடமங்களை நாடுநகரங்களிலுள்ளார் பலருமறிவர்; தாதாசாரியர்களிடமுள்ள சீற்றமோ அளவிடற்பாலது" என்று. அந்தோ! ஈதென்னமருள்! அளவிடமுடியாதது என்னும் பொருளை விவக்ஷித்து அதற்கு நேர் முரணாக அளவிடற்பாலதென்று எழுதியுள்ளார். இவர், எண்டிசையும் வெற்றிபெறுவாக்கினரான ஸ்வாமியின் திருவாக்குக்களில் முரண்பாடுகாட்ட முன்வருகின்றாராம். "ப்ரதமகபளே மக்ஷிகாபாத:" என்றபடி முதலடியிலேயேயன்றோ இவரைப் பங்கம் செய்வித்தனன் பகவான். வடமொழியில் ஸ்வைரிணீ, குலடா என்னும் சொற்களுக்கு விபசாரி யென்று பொருள்; குலமகளென்றே பொருளாக மருண்ட வொருவர் 'என் தாயார் நல்ல குலடை; என் மனைவி சிறந்த ஸ்வைரிணி' என்பராம். அவர்க்கிவர் துணைவர் போலும்; ஒரு திருவாய்மொழிக்குப் பயனுரைக்கின்ற ஆழ்வார் "ஆழ்துயர் போய் உய்யற்பாலரே" என்றருளிச் செய்கிறார். அதற்கிவர்கொண்ட பொருள் 'துயர்தீர்ந்து உஜ்ஜீவிக்கமாட்டார்கள்' என்பதேயென்று இவருடைய ஞானச் சுடர் விளக்கத்தின் முதலடி தன்னிலே தெரிந்ததந்தோ! செயற்பாலது, அறியற்பாலது, அளவிடற்பாலது என்னுஞ் சொற்கள் விசேஷப் பிரசாரமுள்ளவை. பெரிய திருவந்தாதியில் "என்னால் செயற்பாலதென்?" "செயற்பாலவல்லவே செய்குறுதி" என்றிங்ஙனே பிரயோகங்கள் பலகாலுள்ளன. இதன் பொருளை யுணர இலக்கணவிலக்கியப் பயிற்சி சிறிதும் வேண்டா; இச்சிறு விஷயத்தில் மருளுமிவர் உலகம்போற்று முயர்மதிக்கடலான ஸ்வாமியை யெதிரிட்டுக் கொண்டெழுத முன்வருவதற்கு அதிகாரியா? என்பதை அவரவர்கள் கவனிப்பது. இவருள்ளமறியாததன்று. "பலவதீ ஹி பவிதவ்யதா."

## முடிவுரையைப்பற்றி முக்கியமான வார்த்தைகள்

5. இனி முடிவில் என்னவெழுதுகிறாரென்று பார்ப்போம்; ப்ர. அ. ஸ்வாமி செய்து போரவேண்டிய செய்கைகளையும் தவிரவேண்டுமவற்றையும் தெரிவிக்கிறாரங்கு. (1) "ஆழ்வாராசாரியர்களின் நூல்களில் காணும் ஆழ் பொருள்களையெல்லாம் ஆழிசூழுலகமெங்கும் பலபல பாஷைகளிலே பரவச் செய்ய வழிசெய்யவேண்டியது கர்த்தவ்யமாம். (2) வடகலை ஸம்பிரதாயத்தைக் கண்டிக்காமலிருக்க வேண்டுமாம். இதை விவரித்தெழுதியுள்ளார். இதற்குத் தெரிவிக்கிறேன். ப்ர. அ. ஸ்வாமியின் ஸகல நூல்களையும் நாம் தாம் வாசித்திருக்கிறோமென்கிறசெருக்கு அடியேனுக்கிருந்தது. அந்த செருக்கு இவருடைய இச்சிறு நூலை வாசித்தவின்று தொலைந்தது. இவரும் நம்மைப் போலவே ஸ்வாமியின் ஸகல நூல்களையும் ஸேவித்துள்ளாரென்று அறியப் பெற்றேன். ஆனால் ஸ்வாமியின் தமிழ் நூல்களைமட்டும் ஒன்றுவிடாமல் இவர் ஸேவித்தவரேயொழிய வடமொழியிலும் தெலுங்கிலும் ஹிந்தியிலும் ஸ்வாமி வெளியிட்டிருக்கின்ற—வெளியிடுகின்ற நூல்களை ஏகதேசமும் ஸேவித்தவரல்லரிவர். அதற்கு ப்ரஸக்தியற்றவர். ஆழ்வாராசார்ய ஸ்ரீஸூக்திகளின் திவ்யார்த்தங்களை ஸ்வாமி தமிழில் வெளியிட்டு முடித்தவுடனே அவற்றை ஸம்ஸ்க்ருதம் ஹிந்தி தெலுங்கு பாஷைகளிலும் எழுதி வெளியிடத்தொடங்கி அந்தத் திருப்பணி அபரிமிதமாய் நடைபெற்றுவருகின்ற விஷயம் உலகப்பிரசித்தம். வடநாட்டினரும் ஆந்திரதேசத்தவர்களும் இதற்காக பம்பாய் நகரத்திலும் ஹைதரா

பாத் மஹாநகரத்திலும் மிகப்பெரிய தருமஸ்தாபனமொன்று ஏற்படுத்தி அதன் மூலமாகவன்றே இத்திருப்பணி குறையற நடந்துவருகின்றது. அப்புத் தகங்களை இவர் வாசித்து உய்ய ப்ராப்தமாகாவிடினும் இத்தகைய அதிமாநுஷ க்ருத்யங்கள் நடந்துவருகின்றனவென்பதை இவர்தாம் அறியாதவரல்லர். நாதஸ்வரம் வல்லவர் ஆச்சரியமாகத் தோடிராகம் வாசித்துக்கொண்டிருக்கையில் ஒருவர் "இந்த ராகங்களெல்லா மிருக்கட்டும்; தோடி வாசியுங்கள்" என்று சொல்லிப் பரிபவப்பட்ட கதைதான் நினைவுக்கு வருகின்றது. ஸ்வாமியினுடைய விவித விசித்ர விலக்ஷண க்ரந்த நிர்மாணங்கள் அப்ரமேயங்களாயும் அபரிச்சேத்யங்களாயுமன்றே நிகழ்கின்றன.

இனி இவர் என்ன சொல்லக்கூடுமென்றால், அவற்றை நான் அறியாமலில்லை, நன்கறிவேன்; உலகமுகக்க நின்ற அந்தத் திருப்பணிகளோடே நிற்கட்டுமிவர்; எங்கள் ஸம்பிர்தாயத்திலுள்ள சொத்தல் புழுத்தல்களையெல்லா மெடுத்துக்காட்டுகிற காரியம் இவர்க்கு வேண்டாமென்பதே என்னுடைய விவக்ஷிதம்—என்பர். எம்பெருமானை நோக்கி 'அப்பா! நீ ஸாதுபரித்ராணத்தோடும் தர்மஸம்ஸ்தாபநத்தோடும் நிற்கக்கடவாய்; *விநாசாய ச துஷ்க்ருதாம்* என்கிறாயே, அது ஏதுக்கு? துஷ்க்ருத்துக்களும் ஒரு மூலையில் கிடக்கட்டுமே; அவர்களை விநாசம் செய்வானேன்? அது வேண்டாமே' என்றாரா மொருவர். *தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந், க்ஷிபாம்ய ஜஸ்ரமசுபாந் ஆஸுரீஷ்வேவ யோநிஷு* என்று விடையிறுத்தானுமதற்கு.

## சாமா. திருமலை தாதாசாரியர் ப்ரஸ்தாவம்

6. அன்பர்களே! ஒரு வேடிக்கை பாருங்கள்; இவர் முதற்பக்கத்தில் (பாரா 4-ல்) எழுதியிருப்பதாவது, "வித்வான் ஸ்ரீஉவே. சாமா. திருமலை தாதாசாரியர் தென்னாசார்ய ஸம்ப்ரதாயங்களில் காணும் தோஷங்களை நாட்டார்க்கு நன்கு எடுத்துக்காட்டியவர்" என்று வெகுசந்தோஷமாக எழுதியுள்ளார். தென்னாசார்ய ஸம்பிரதாயங்களில் என்ன தோஷங்களிருக்கின்றன? அவர் என்ன எடுத்துக் காட்டினார்? என்று கேட்டால் அதற்கொரு பதிலும் சொல்லகில்லாரிவர்; இவர்தாம் தம்முடைய வயிற்றெரிச்சல் தீர ஞானச்சுடர் விளக்கென்று பெயரிட்டு மானுனிகளை வைதிருப்பதுபோல அந்த சாமா தாதாசாரியரும் வாசாமகோசரமாக வைதிருக்கிறாரென்பது வாஸ்தவம்; 'இல்லையில்லை; அவர் வையவேயில்லை; தென்னாசார்ய ஸம்பிரதாய தோஷங்களைத்தான் நன்றாக வெடுத்துக்காட்டியிருக்கிறார்! என்று இவர் சொல்லுவர். அதைஅப்படியே ஒப்புக்கொள்வோம்; எங்கள் ஸம்பிரதாயத்திலுள்ள தோஷங்களை உங்களிலேயொருவர் எடுத்துக்காட்ட முன்வந்ததுபோல, உங்கள் ஸம்பிரதாயத்திலுள்ள தோஷங்களை எங்களிலே யொருவர் எடுத்துக்காட்ட முன்வந்தால் இதில் வருத்தமும் வெறுப்பும் வசவுகளும் ஏதுக்கு? என்று கேட்டால் இவர் என்ன சொல்லுவார்? திசைதொறும் விழித்து நிற்பர்.

மேலும் இதில் ஒரு பெருவாசியுமுள்ளது. அந்த திருமலை தாதாசாரியர் தென்னாசார்ய ஸம்ப்ரதாயதூஷணம் பண்ணத்தொடங்கியது அப்ரஸக்தமாகவே யல்லது ஸகாரணமன்று. யாரேனுமொரு தென்னாசார்ய ஸ்வாமி முன்னே தூஷணமெழுதியிருந்து அதை மறுக்கவேண்டியதற்காக அந்த திருமலை தாதாசாரியர் பிரவர்த்தித்திருந்தால் பாங்கே. அங்ஙனமில்லை. அவர் தாமாகவே தூஷணத்வஜாரோஹணம் செய்யப்புறப்பட்டார். உடனுக்குடனே கண்டனங்களும் பெற்றொழிந்தார். ப்ர. அ. ஸ்வாமியின் நூல்கள் ஒவ்வொன்றையும் எடுத்துப் பார்க்கலாம். ஸ்வாமி தாமாக எழுதுவது வியாக்கியான நூல்களும்

உபந்யாஸ நூல்களுமான லோகாபிராம க்ரந்தங்களேயாகும். கண்டன நூல்களெல்லாம் பிறருடைய தூஷணச்சுவடிகளுக்கு மறுப்பாக எழுதினவையேயொழிய, அவசியமின்றித் தாமே முற்பட்டெழுதிய கண்டனக்ரந்தம் ஒரு சிறு காகிதமும் காட்டமுடியாது. உண்மையறிவாளிகள் இதை உணர்ந்தேயுள்ளார்கள்.

### விவாத நூல்கள் எழுவதற்கு இவரே பீஜபூதர்

7. உள்ளபடி சொல்லில், பதினைந்து வருஷகாலமாக ஸ்ரீஸ்வாமியினாலும் அவருடைய அன்பர்களாலும் வெளியிடப்பட்டுவருகிற வாதவிவாத நூல்களுக்கு இந்த மஹாநுபாவரே மூலகாரணபூதரென்பதை ஸத்யமிட்டுச் சொல்லலாம். பரம ஸாதுவும் பரம ஸாத்விகருமான ஸ்ரீஉவே. (உப்பிலியப்பன் ஸந்நிதி) நவநீதம் ஸ்ரீராம தேசிகாசாரியர் ஸ்வாமி வெளியிட்ட தேசிகப்பிரபந்த வுரையில், இவர் மஹாவ்யாபகர்போல ஸ்ரீதேசிக வைபவமென்று ஒன்று எழுதிச் சேர்த்தார். அதில் அப்ரஸக்தமாகத் தென்னாசார்யர்களைப் பிடித்திழுத்து நாலைந்திடங்களில் மிகவும் அநியாயமாகவும் அஸஹ்யமாகவும் தூஷித்திருக்கின்றார் அது 1944-ஆம் ஆண்டில். அப்போதே இவர்மீது வஜ்ரகுடாரங்கள் விழுந்தன. அது நல்ல முஹூர்த்தம்போலும்; அதுமுதல் இடையறாமல் விவாத நூல்வெளியீடுகள் நிகழ்ந்துவருகின்றன. தென்னாசாரியர்களை தூஷிப்பதுதான் தேசிகனை பூஷிப்பது—என்பதாக இவருடைய உறுதி. அந்த தூஷணமில்லாமல் இவரால் ஒரு வரியும் எழுதமுடியாதென்று தேறியிருக்கின்றது. இதைப்பற்றி இப்போது இவ்வளவோடு நிற்க, மேலே பரக்கச் சொல்லுவோம்.

### இவர்க்கு நியாயவாதியென்று பெயராம்

8. முதற்பக்கத்தில் இவர் ப்ரஸ்தாவித்த சாமா திருமலைதாதாசாரியரென்பவர் தாதாசார்ய சிஷ்யரான இவர்க்கு ஆசார்யராம் அவர்தாம் ஸம்ப்ரதாய தூஷணங்களுக்கு அடியிட்டவர் என்பதை இவர் ஒளிக்காமல் வெளியிட்டுவிட்டார். பிறர் செய்திருந்த தூஷணைகளுக்கு அவர் (சாமா) மறுப்பெழுதினதாக இவர் காட்டவில்லை. துராக்ரஹத்தினால் அவர் தாமாகவே தூஷிக்கத் தொடங்கினதாகவே இவர் காட்டியிருக்கின்றார். அதில் இவர்தமக்குச் சாலவும் உகப்பு. ப்ர. அ. ஸ்வாமி பிறர்செய்த தூஷணைகளைத் தள்ளுகின்றாரே அதில் வெறுப்பு. ஒருத்தி தன் மருமகப்பிள்ளையின் நலத்தைப் பேசும்போது அவன் தனக்குக் கிடைக்கும் பொருள்களையெல்லாம் இவளது மகளிடத்திலேயே கொடுத்துவிடுவது வழக்கமென்பதை மிகமிகக் கொண்டாடிச் சொல்லுவள்; தன் மகன் தனக்குக் கிடைக்கும் பொருள்களையெல்லாம் இவள் தன் மறுகியிடம் கொடுத்துவிடுவதைப்பற்றி 'இப்படியும் ஒரு அநியாயமுண்டா?' என்று வயிறடித்துச் சொல்லுவளாம். அக்கதைக்கும் இவரது கதைக்கும் சிறிதேனும் வாசியுண்டோ? இவரைச் சேர்ந்தவர்கள் தென்னாசார்ய ஸம்ப்ரதாயங்களில் நிறைய தோஷங்களிருப்பதாகக் காட்டிக் கொண்டேயிருக்க வேணுமாம். அதற்கு எதிர்த்தலையில் யாரும் மறுப்புரைக்கலாகாதாம். இவர்க்கு நியாயவாதியென்றுபெயராம். ஒருவர் தாமாகச்சென்று ஒருவரை அடிக்கிறார்; மற்றொருவர் தம்மேல் அடிவிழாதபடி தம்மை ரக்ஷித்துக் கொள்ளவேண்டி அடிக்கிறார். இவ்விருவர் மீதும் வழக்குச் சென்றால் முந்திய நபர்க்கு தண்டனையும் பிந்திய நபர்க்குப் பாராட்டுதலும் நீதிமன்ற முறைபாடு. இவ்வடைவில் சாமா தாதாசாரியர்க்குக் கிடைக்க வேண்டியதென்னவென்பதை நியாயவாதியானவிவர் அறியாதவரல்லர். ஆக, உபக்ரமோபஸம்ஹாரங்கள் மிக வழகியவையென்று காட்டினோம்.

**இங்கிருந்து நாம் எழுதும் விஷயம் இந்நூலுக்கு உயிரானது. இதற்கு இவர் நேரான விடை தருவாராயின் இவரையே ஸ்ரீவைஷ்ணவகுல திலகராகப் பட்டாபிஷேகம் செய்து நிர்சலும் வழிபடுவோம்.**

9. ஒருபுத்தகத்தை வாசித்தால் அதிலுள்ளவிஷயங்களை உள்ளபடி க்ரஹிப்பதும் உள்ளபடி அநுவதிப்பதும் பிராமாணிகர்களான விவேகிகளுக்கு உற்றது. புத்தகங்களைப் பண்டிதர்களோடு பேதையர்களோடு பெண்களோடு வாசியற யாவரும் வாசித்து விடலாமாயினும் அவற்றிலுள்ள விஷயங்களை க்ரஹிப்பது அனைவர்க்கும் ஒருங்கே ஸாத்யமன்று. "விட்டில் கள்ளன் புகுந்து தவலையைக் கொண்டுபோய் விட்டான்" என்றெழுதியிருந்தால் தலையைக் கொண்டுபோய் விட்டானென்று வாசித்துக் கதறியழும் மேதாவிகள் பலருளர். ஒரு புத்தகத்தையோ பத்ரிகையையோ வாசித்தவர்கள் வாசித்து விட்டு வெறுமனே யிருந்துவிட்டால் அவர்கள் அவற்றிலுள்ள விஷயங்களை க்ரஹித்தவிதம் ஒருவராலும் தெரிந்துகொள்ள முடியாததாம். வெறுமனேயிருந்து விடாமல் விஷயங்களை அநுவாதம் செய்யப்புகுவர்களாயின் அப்போதுதான் அவர்களின் விஷய க்ரஹண வைதக்த்யம் விளங்கத்தொடங்கும். அநுவாதம் தவறாக இருக்குமாயின் விஷயத்தை இவர் ஸரியாக க்ரஹிக்கவில்லையென்று அறிஞர் அநாயாஸமாக அறிந்து கொள்வர். சிலர் விஷயத்தைத் தாம் ஸரியாக க்ரஹித்திருந்துங்கூட உலகை வஞ்சிப்பதற்காகத் தவறுதலாய் அநுவதிப்பதுமுண்டு. முந்தினதை அந்யதாக்ரஹணமென்பர்; பிந்தினதை விப்ரலிப்ஸையென்பர். ப்ரக்ருதம் இவரிடத்தில் இவ்விரண்டும் புஷ்கலமென்பதைக் குன்றிலிட்ட விளக்காக்குவோம். விஷயங்களில் சாஸ்த்ரிய விஷயங்களுமுண்டு; ஸாதாரண விஷயங்களுமுண்டு. ஸாதாரண விஷயங்களைக்கூட ஸரியாக க்ரஹிக்கமாட்டாதவர் சாஸ்த்ரீய விஷயங்களை ஸரியாக க்ரஹிக்க ப்ரஸக்திலேசமும் கிடையாதன்றோ. இரண்டிலும் இவர் முழுமோசமென்பதை இங்கே காட்டுவோம்.

### சாமாதாதாசாரியரை நிஸ்ஸந்ததியென்றதுண்டா ?

10. இப்போது சர்ச்சையில் வந்திருக்கிற சாமா திருமலைதாதாசாரியரைப்பற்றி இவர் முதலிலேயே (பாரா 4-ல்) எழுதியிருக்கிறாரன்றோ. அங்கு எழுதியுள்ளார்—"இவருடைய பௌத்திரர்கள் சென்னையிலும் காஞ்சியிலும் உள்ளது ஸுப்ரஸித்தம். மதிமயக்கத்தால் மக்களில்லையென்றெழுத மனம் துணிந்தது போலும்" என்று. "ப்ர. அண்ணங்கராச்சாரியரின் முரண்பாடுகள்" என்று மகுடமிட்டு இவர் காட்டத்தொடங்கின முரண்களில் இது தலையானது. சாமா திருமலைதாதாசாரியர் நிஸ்ஸந்ததியாய் விட்டார் என்று ஸ்வாமியெழுதியிருப்பதாக வைத்து இவர் இங்ஙனே அபூர்வஸமாசாரம் காட்டியுள்ளார். இதை இவர் மூதலிப்பரா? இவரையும் இவரைச் சேர்ந்தவர்களையும் போல் ஸ்வாமி ஒருவிஷயத்திலும் மருள்பவரல்லர். சிறியவிஷயமோ பெரிய விஷயமோ ஸ்வாமி எது எழுதினாலும் பிறர் அவத்யம் கூறும்படி எழுதாரென்பது அன்று முதலின்றறுதியாகத் தேறியுள்ள விஷயம். இது இவரும் மனப்பூர்த்தியாக இசைந்த விஷயம். சாமாதாதாசாரியர் நிஸ்ஸந்ததியாய் விட்டாரென்றோ அவர்க்கு மக்களில்லையென்றோ ஸ்வாமி எழுதியிருப்பது கிடையாது.

இவர் பெரும்பாலும் 'வரதன் ஸன்னிதி வரலாறு' என்கிற [ஸ்வாமியின்] திவ்யக்ரந்தத்தையே இதில் க்ஷேபிக்க ஆசை கொண்டெழுந்தவர். அதில் [பக்கம் 17, பாரா 46]—

"சாமா திருமலை தாதாசாரியரென்பவர் மணவாளமாமுனிகளையும் அவரடியார்களையும் வாசாமகோசரமாக நிந்தித்து..........பலவகைப்பட்ட பங்கங்களையடைந்து பரிதாப நிலைகளையெய்தி முடிந்தார்" '

என்பது ஸ்வாமியின் திருவாக்கு. இங்கு ஸந்ததிப்ரஸ்தாவம் ஏதேனுமுண்டோ? இங்கும் கிடையாது, எங்கும் கிடையாது. தப்பான விஷயம் ஸ்வாமி திருவாக்கிலோ திருக்கரத்திலோ எங்ஙனம் வெளிவரும்? இவர்களைப்போலே தப்பும் தவறுமாயும் பொய்யும் புளுகுமாயும் எழுதிவிட்டுத் திண்டாடி நிற்கும்படியாக ஸ்வாமியின் ஜாதகம் அமையவில்லையே. உள்ளதை உள்ளபடியே காட்டுவதும், பதினுயிரவர் கூடினாலும் பங்கம் விளைக்கமுடியாத நிலைமையில் எழுதுவதுமன்றோ ஸ்வாமிக்கு இவர்தாமே மனமுவந்து காட்டிய சிறப்பு. சாமா தாதாசாரியருடைய பௌத்திரிக்கு நம்ஸ்வாமியே ஸமுசிதஸ்தலத்தில் விவாஹம் செய்வித்தவராதலால் அக்குடும்ப வரலாறுகளை நன்கறிந்தவர். அறிந்திலரென்றாலும் தமக்குத் தெரியாத விஷயங்களில் தலையிடவேமாட்டார்.

### ஸ்வாமியின் திருவாக்குக்கு எங்கும் வெற்றியே

*11.* இங்கே ஒரு வஸ்துஸ்திதியையும் தெரிவிப்போம். மக்களில்லையென்று ஸ்வாமி திருக்கையாலெழுதி யிருந்தாரானால் அதை ஸத்யவாக்காக மூதலிக்கவும் முடியும். பகவத்கீதையில் இரண்டாமத்யாயத்தில் "ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர் மரணாததிரிச்யதே" என்றும், பதினோராமத்யாயத்தில் "மயைவைதே நிஹதா: பூர்வமேவ' என்றும் கீதாசார்யன் பணித்தவை எளிதாகக் கைகொடுக்கும். தாக்ஷிணாத்யகலாநிதி (கீர்த்தி மூர்த்தி) சாமிநாதய்யரவர்கள் ஒரு விநோதம் சொல்லக்கேட்டதுண்டு; ஒருமஹான் "இராவணன் இராமனை வதைசெய்துவிட்டான்" என்ன, யாவரும் நகைத்தார்களாம்; இரா வண்ணன்—இருளன்னமாமேனியனான இராகவன், இரா மனை—இராக்காலங்களிலே திரியும் மன்னனான [நிசாசரனான] தசானனனை வதைத்தான் என்றதாகப் பொருள் விவரித்ததைக் கேட்டு நாணிப்போயினராம். ப்ரக்ருதம் அத்தகைய ஸமர்த்தனம் எதுவும் வேண்டா; இவருடைய இருளும் மருளும் துயக்கும் மயக்கும் விளங்கிற்றேயொழிய ஸ்வாமி தவறாக அணுவும் எழுதியிருக்கவில்லையென்பது உறுதி. இவர் இதை விப்ரலிப்ஸயா எழுதினாரென்பதில்லை; இவருடைய க்ரஹண சக்தியே இவ்வளவுதான். மிகச்சிறு விஷயமானவிதில் இவர் இவ்வளவு விபரீத க்ரஹணம் பண்ணுமவராயிருக்க, பெரிய விஷயங்களைப்பற்றிப் பேசத்தானுவதுண்டோ? அதிலும் ஒன்று காட்டுகிறேனிங்கு; பிறகு ஒன்றுவிடாமல் காட்டுவேன்.

### ஆசார்யஹ்ருதய தூஷண ப்ரஸங்கம்

*12.* இவர் தமக்கு ஸர்வாத்மநா நிலமல்லாத ஆசார்யஹ்ருதய மஹாக்ரந்தத்திலேபுக்கு ப்ரஸங்கம் செய்யத்தொடங்கிவிட்டார்; ஸ்ரீபாஷ்யம், சததூஷணி, தத்வமுக்தாகலாபம் முதலானவற்றில் இவர் தாராளமாக ப்ரஸங்கம் செய்யஇழியலாம். மஹிஷங்கள் கண்ட ஜலாசயங்களிலும் இறங்கிவிட்டாலும் கடலில் புகுவதற்கு அஞ்சியே நிற்கும். ஆசார்யஹ்ருதயம் அப்ரமேயோ மஹோததி: என்பதறியாதவரல்லர். அதற்கும் இவர்க்கும் என்ன ஸம்பந்தமென்றால் தூஷ்யதூஷகபாவ ஸம்பந்தத்திற்குக் குறையில்லை. நிற்க, இவர் பற்றிக்கொண்டுமன்றாடுகிற விஷயத்தில் நானும் கைவைக்க அநதிகாரி. அஸ்மதீயப்ரார்த்தநா ப்ரஸந்நரான ஸ்வாமியின் அத்புதவ்யாஸமே நல்ல தெளிவைப் பிறப்பிக்கும். இவர் அதில் இல்லாத விஷயத்தை ப்ரஸங்கித்திருப்பதைமட்டும் இங்கெடுத்துக்

காட்டுகிறேன். அதில் (32.) "ஸாதநஸாத்யங்களில்" இத்யாதிசூர்ணைக்கு ஸ்வாமியிட்டிருக்கிற தாத்பர்ய ஸாரபங்க்திகளை உதாஹரிக்குமிவர்—"திருவயிந்திரபுரத்தில் ஒரு குளமாம்; அங்கே கருமநிஷ்டர்கள் ஒரு துறையிலேயிறங்கி யிருந்தார்களாம்..........இப்படி மூலத்திலில்லாத விஷயத்தைச் சண்டைக்கு ஒரு மூலமாக்கினதென்னோ?" என்றெழுதியுள்ளார். அவ்வளவோடும் நிற்காமல் "குளமில்லாத ஊர்" என்றும் "ஏகாந்தமாக தேசிகன் வாழ்ந்தவிடமும் அவரடியார்கள் வாழுமிடமுமான திருவயிந்திரபுரத்திலே சென்று வலியச்சண்டைக்கு இழுத்து ஸூத்ரத்திற்குப் பொருள் கூறியிருக்குமழகைப் பாருங்கள்" என்றும் அதிஹேயமான முறையில் எழுதியுள்ளார். ஒரு அக்ரஹாரத்தில் ஒரு புரோஹிதர் தம் வித்யார்த்திகளுக்கு பூர்வாபரப்ரயோகம் பின்மாலைவேளையில் ஸந்தை சொல்லிக்கொடுத்து வந்தார். ஒருநாள் தம்முடைய க்ருஹத்தில் அநுபபத்தியினால் வேறொருவருடைய வாசல்திண்ணை விசாலமாயிருந்ததில் தத்க்ருஹஸ்வாமியின் அநுமதியைப்பெற்று உட்கார்ந்துகொண்டு ஸந்தை சொல்லி வந்தார். அந்த மந்த்ரங்களில் "யந் மே மாதா ப்ரலுலோப சரதி" என்று வருமிடத்தை ஸந்தை சொல்லிக்கொண்டிருக்கையில் அந்த க்ருஹஸ்வாமியின் குமாரன் உள்ளிருந்தெழுந்தோடிவந்து 'ஓய்! என் தாயார் விபசாரியென்று எவனோவொருவன் கட்டிவிட்டுத் தப்புப்ரசாரம் பண்ணிவந்தால் அதை நீர் கொஞ்சமும் கூச்சமில்லாமல் நிச்சப்தமான பின்மாலைவேளையில் என் க்ருஹத்திலேயேவந்து எங்களெல்லாருடைய காதிலும்விழும்படி கத்துகிறீரே! இதென்ன தௌஷ்டிகம்!' இதென்ன குண்டுதைரியம்! என்று சொல்லிக்கொண்டே விறகு கட்டையினால் அவரையும் சிஷ்யர்களையும் அடித்துத் துரத்தினனாம். அதே கதையாகவிருக்கிறது இவருடைய ப்ரஸங்கம்.

## வில்லிபுத்தூர்ப்பகவர் வார்த்தை விளக்கம்

13 உடையவர் காலத்திற்குமுன்னே திருவயிந்திரபுரத்தில் நடந்ததொரு கதையை ஆசார்ய ஹ்ருதயமூலம் ஸூசிப்பித்திருக்கின்றது. அதை மணவாள மாமுனிகள் தமது வியாக்கியானத்திலே விசதீகரித்தருளியுள்ளார். ஸ்வாமி தம்முடைய ஸாரதீபிகையிலும் அதை விளக்கியுள்ளார். அந்த கதையின் தத்துவமென்ன? என்பதை ஸ்வாமியின் உபந்யாஸவிம்சதியிலிருந்து தெரிந்து கொண்மின். அது நிற்க, சாமா திருமலை தாதாசாரியர் நிஸ்ஸந்ததியாய்விட்டாரென்று ஸ்வாமி எழுதியிருப்பதாக வெழுதினதுபோலவே இங்கும் குளமில்லாத வூரிலே குளமிருப்பதாக வெழுதினரென்று அஸத்கல்பகமொன்று செய்துகொண்டு தலைகாலில்லாமல் நிந்தித்திருக்கிறர். ஆசார்ய ஹ்ருதயத்திற்கு நம்ஸ்வாமியின் உரைகள் நான்கு. ஒன்றிலாவது குளமென்கிற சொல் இட்டிருப்பதுண்டாவென்று கண்ணுடையார் பார்க்கவேணும். ஒன்றில் "தடாகத்தில் நின்றும்" என்றிருப்பதை நோக்கி ஸம்ஸ்க்ருதகந்தமு மறியாதவிவர் கைபோனபடி யெழுதிவிட்டார். தடாகமென்று நீர்நிலைக்குப் பெயர். பவபூதி மஹாகவி உத்தரராம சரிதத்தில் "பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா" என்கிறர். அங்கு தடாகமென்பதற்குக் குளமென்கிற பொருள் அடியோடு பொருந்தாது. இங்கு நல்ல தெளிவைப் பிறப்பிக்கிறேன். தமிழில் பொய்கையென்கிற சொல் பிரஸித்தம். இதற்குக் குளமென்று பொருளேயொழிய ஆறு என்பது பொருளன்று. ஸ்ரீக்ருஷ்ணபகவான் காளியநாகத்தோடு பிணங்கியதும் கோபீ வஸ்த்ராபஹாரம் செய்ததும் யமுனையாற்றிலே யல்லது குளத்திலன்று. அங்குக் குளமும் கிடையாது; தேசிகனும் யாதவாப்யுதயத்தில் 'காலிந்த்யாம்' என்று ஸ்பஷ்டமாக ஸாதித்துள்ளார். கோபாலவிம்சதியிலும் "வாஸோ ஹ்ருத்வா தீநகரஸுதாஸந்நிதௌ வல்லவீநாம்" என்கிறர்.

திநகரஸுதா என்று எமுனையாற்றுக்குப் பெயர். இப்படியிருக்க "இனியென்றும் பொய்கைக்கு வாரோம்" என்றும் "இப்பொய்கைக்கு எவ்வாறு வந்தாய்" என்றும் "தடம்படு தாமரைப்பொய்கை கலக்கி விடம்படு நாகத்தை வாலபற்றியீர்த்து" என்றும் "ஆயிரவாய் நச்சழல் பொய்கையில் நாகத்தினோடு பிணங்கி நீ வந்தாய்போலும்" என்றுமுள்ள அருளிச்செயல்கள் கோபீ வஸ்த்ராபஹாரமும் காளியமர்த்தனமும் ஒரு குளத்தில் நடந்ததாகத் தெரிவிக்கின்றனவே! இதெப்படி? என்று கேட்டால் இவர் தலையைத் தொங்கவிட்டுத் தரையைக்கீறி நிற்கவேண்டுமத்தனை. வாய்திறக்க வழியேகிடையாது.

## தடாகமென்றதன் தத்துவ நிரூபணம்

*14* இங்கே தத்துவத்தை நாம் தெரிவிக்கிறோம். "அதிலே தேங்கின மடுக்கள்போலே" என்கிற ஸ்ரீவசநபூஷண திவ்யஸூக்திப்படி மஹாநதிகளிலே சில மடுக்களைத் தேங்கவைப்பது வழக்கம். அதை மடுவென்றும் சொல்லுவர், பொய்கையென்றும் சொல்லுவர், தடாகமென்றும் சொல்லுவர். கோபீ வஸ்த்ராபஹாரமோ காளியபங்கமோ பெருக்காருகப் பெருகியோடுகிற நதியிலே நடந்ததில்லை. பெரிய தேக்கங்களிலேதான் நடந்தது. மஹாநதிகளுள்ள ஊர்களிலே அனுஷ்டானம் செய்பவர்கள் நேராக ஓட்ட நீரில் செய்வதுகிடையாது. ஆங்காங்குத் தடாகமாகத்தேக்கி வைத்து அதிலேதான் செய்வர்களென்பது இற்றைக்கும் எற்றைக்கும் காணலாகும். ஆக, "குளமில்லாதவூரிலே குளமாம்" என்று இவர் பரிஹஸித்தெழுதுமது இவருடைய அங்யதாக்ரஹணத்தையே நிலைநாட்டி நிற்கும். குளமென்கிற சொற்பிரயோகமே இல்லையாயிருக்க 'குளமில்லாத வூரிலே குளமாம்' என்று இவரேசுவது பிச்சித்தனமாய் முடிந்ததன்றோ.

## யாதவப்ரகாசர் தாயாரைப்பற்றி

*15.* இனி ஒவ்வொரு விஷயத்தையும் விமர்சிப்போம். ப்ரக்ருத புஸ்தகத்தில் ஒவ்வொரு பாராவும் ஒவ்வொரு வரியும் அஸங்கதப்பேச்சே மலிந்ததென்றோம். முக்கியமாக எதையெதை யெடுத்துக் காட்டுவோமென்று ஆலோசிக்கிறேன். அமுக்கியமென்று எதையும் தள்ளுவதற்கில்லை. ஒவ்வொரு தவறும் மிக முக்கியமே. ஆனாலும் 'வாச: க்ரமவர்த்தித்வாத்' எல்லாத் தவறுகளையும் ஏககாலத்தில் எடுத்துக்காட்ட முடியாதே; ஒன்றன்பின் ஒன்றாகத்தானே காட்டியாக வேண்டும். ஸ்வாமி பூர்வாசார்ய ப்ரபாவமென்றொரு நூல் எழுதி வெளியிட்டிருக்கிறார். நெடுநாளாக உலகில் காலக்ஷேபத்திலுள்ள ஆறுயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தைத் தழுவி யெழுதப்பட்டவதில் யாதவப்ரகாசர் எம்பெருமானாரை யடிபணிந்து உஜ்ஜீவிக்கப்பெற்ற வரலாற்றை யெழுதுகையில், ஸ்ரீராமாநுஜரின் பிரபாவத்தைக் கண்டு யாதவப்ரகாசன் தாயார் தம்முடைய குமாரனும் ஸ்வாமியை யடிபணிந்து வாழலாகாதா என்று நினைத்து இந்த மனோரதத்தை மகனிடம் பலகாலும் தெரிவித்து வந்ததாக வெழுதியுள்ளார். இதை தூஷிக்கவெழுந்த இவர் எழுதுகிறார்—

> "யாதவப்ரகாசன் திருந்தி வைணவரானது எப்படியாவதிருக்கட்டும்; ஏக தண்டியாய் இருந்த காலத்தில் தாயார் கூடஇருப்பாளா? அத்வைதிகள் மதத்தில் தாயாரும் சன்யாசியான தன்பிள்ளையுடன் இருப்பதுண்டா? ஸ்ரீகாமகோடி பீடம் சங்கராசார்ய ஸ்வாமிகள் போன்ற பெரியவர்கள் இதை சரியென்று சொல்வார்களா? பொதுப்படையாக இருக்கவேண்டிய உலக ஞானங்கூட இவருக்கு மிகக்குறைவு என்று ஏற்படவில்லையா? என்று.

இதிலிருந்து வடகலை மதத்தின் ஊழல்கள் வெட்டவெளிச்சமாகிறபடியை விரிவுக்கு அஞ்சாமல் காட்டுகிறோம்(பாரா 29 வரை)யாதவப்ரகாசரும் தாயாரும் ஏககுடும்பமாக ஒரேக்ருஹத்தில் வாழ்ந்ததாகக் கதையெழுதப்பட்டிருக்கவில்லை; அப்படி யெழுதியிருந்தால் இவர் இத்தனை யெழுத ப்ரஸக்தியுண்டு. குமாரன் ஸந்யாஸியாய் விட்டானென்று தாயார் ஊரைவிட்டே ஓடிப்போய்விட வேண்டிய அவசியமில்லை. இருவரும் வெவ்வேறு ஸ்தலங்களில் தாராளமாக வாழலாம். கண்டவிடங்களில் வார்த்தையும் சொல்லலாம். இம்முறையில் யாதோர் அவத்யமுமில்லை. கோவில் குளங்களில் குமாரனைக் காணும்போது தாயார் தம் மனோரதத்தைக் கூறுவதில் என்ன அநுபபத்தி? என்ன அஸாங்கத்யம். இந்நிகழ்ச்சியை இற்றைக்கும் நாளைக்கும் கட்கூடாகக் கண்டும் வருகிறோம். இதன் உபபத்தியநுபபத்திகள் எப்படியாவதிருக்கட்டும். நூல்களைக் காண்மின்.

### வடகலை குருபரம்பராப்ரபாவம் படுகிறபாடு

16. சரித்திரமோ ஏறக்குறைய ஆயிரம் வருடங்களுக்கு மேற்பட்டது. இதையோ இதுபோன்ற மற்றுள்ள சரித்திரங்களையோ நான் ஸாக்ஷாத்தாகக் கண்டேனென்றோ, நான் கர்ணபரம்பரையாகக் கேட்டேனென்றோ யாரும் சொல்லிக்கொண்டு எழுதிவிட முடியாது. ப்ர. அ. ஸ்வாமி எது எழுதினாலும் அசைக்க முடியாத பிரமாணங்களைக் கொண்டே எழுதுபவர் என்பது உலக முழுதுமுணர்ந்தது. அவர் அப்ரமாணமாயும் ஸ்வகபோல கல்பிதமாயும் ஒன்று எழுதினாரென்று இதுகாறும் யாரும் நிரூபித்ததில்லை. சிலர் இப்படி ஸஹஸா எழுதியிருந்தாலும் அவ்வெழுத்து அடுத்த நாளிலே பங்கமடைந்து போயிற்றென்பதற்கு இவருடைய நூலே ஸாக்ஷி. இந்த யாதவப்ரகாச கதை கிடக்கட்டும்; அபரிமிதமாகச் சொல்லப்படுகிற உடையவர் சரித்திரமும் மற்றுமாழ்வாராசாரியர்கள் சரித்திரங்களும் உபயகலையாராலும் அநுஸந்திக்கப்பட்டு வருகின்றனவே; இதற்கு எந்த க்ரந்தம் பிரமாணம்? என்று கேட்டால்; இருகலையாரும் பிரமாணம் காட்டியாக வேண்டும். தென்கலையார்கள் திவ்யஸூரி சரிதத்தையும் ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்தையும் பிரமாணமாகக் காட்டினால் வடகலையார்களும் இங்ஙனே பிரமாணம் காட்டியாக வேண்டும். அவர்களும் த்ருதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்திர ஸ்வாமி ஸாதித்த மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவமென்று ஒன்று வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது பலமுறை தமிழிலும் தெலுங்கிலும் அச்சேறியுமிருக்கிறது. இவ்விரண்டு லிபி தவிர வேறு லிபியில் தமிழ்நூலை அச்சிடமுடியாதன்றோ. இந்த ப்ரபாவ நூலைக் கடைசியாக மைஸூர் ஸ்ரீபரகாலமடம் ஸொந்தச்செலவில் அச்சிட்டிருக்கின்றது. மிகவுயர்ந்த காகிதத்தில் அதிரமணீயமான தெலுங்கு லிபியில் அச்சிட்டிருக்கின்றது. இன்னமும் புதுமை மாறாத புத்தகமிது. இதில் முடிவில் "Printed by H. Srinivasaraghavacharya at the Sreenivasa Press, Mysore" என்றுள்ளது. இந்த ஸ்ரீநிவாஸராகவாசாரியர் பல வருடங்கள் பரகாலமடத்தில் ஸ்ரீகார்ய துரந்தரராக இருந்து சில வருஷங்களுக்கு முன்புதான் பரமபதித்தவர். அவர் மிகச்சிறந்த வித்வான். இதில் முதலில் 24 பக்கங்கள் ஸ்ரீபரகால ஸ்வாமிதாமே (அல்லது தத்ப்ரேரிதரான கார்யஸ்தர்) அனேக விஷயங்கள் எழுதியுள்ளார். முதல் ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி திவ்யஸூரி ஸ்தோத்ரம் செய்தருளினாரென்றும், இரண்டாவது ஸ்வாமி பன்னீராயிரப்படி குருபரம்பராப்ரபாவம் செய்தருளினாரென்றும் மூன்றாமவர் மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் செய்தருளினாரென்றும் தெரிவித்து 204 பக்கமுள்ள அதை அச்சிட்டு "த்ருதீய ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஜீயர் செய்தருளின மூவாயிரப்படி குருபரம்பரா

ப்ரபாவம் ஸம்பூர்ணம்" என்று முடித்திருக்கிருர்கள். அதில் எம்பெருமானர் வைபவத்தில் யாதவப்ரகாசர் வந்து பணிந்த வரலாற்றைச் சொல்லுமிடத்தில் (பக்கம் 71ல்)—

"கூரத்தாழ்வானும் நடாதூராழ்வானும் முதலியாண்டானும் யதிராஜர் திருவடிகளிலே ஆச்ரயித்தார்கள்; பின்பு யாதவப்ரகாசன் தாயார் இளையாழ்வாருடைய ப்ரபாவத்தைக் கண்டு யாதவனும் ராமாநுஜன் திருவடிகளிலே ஆச்ரயித்தால் நன்ருயிருக்குமென்று நினைக்க, அப்போது அதுவே நல்லது நல்லதென்கிற உபச்ருதியைக் கேட்டு யாதவப்ரகாசனுக்கும் இச்செய்தியைச் சொல்ல, .... .. .... ...."

என்கிற பங்க்திகள் பேர்க்கவும் பேராதபடி பிரகாசிக்கின்றன. இவ்விஷயத்தில் தூஷகர் எழுதியிருப்பதாகக் கீழே யெடுத்துக்காட்டின வாக்கியம்—"பொதுப் படையாக இருக்கவேண்டிய உலகஞானங்கூட இவருக்கு (P. B. A.க்கு) மிகக் குறைவு என்று ஏற்படவில்லையா?" என்பதை இவர் உண்மையாக யாரிடத்தில் உபயோகிக்க வேணுமென்பதை இனி நாம் விவரிக்க வேணுமோ? அந்த ப்ர பாவகர்த்தாவான ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஜீயர்க்கும், அதை அச்சிடுவதற்கு இரண்டாயிரம் ரூபாவரை மடத்திலிருந்து தந்த மடாதிபதிக்கும், சோதநாதி காரியங்களை நிர்வஹித்த ஸ்ரீகார்யதுரந்தரர்க்கும்தான் உபயோகிக்க வேணு மென்பதல்லாமல் வேறு என்ன சொல்ல முடியும்.

### வெள்ளை சாத்துப்படி கதையில் ப்ரவேசம்

17. நீதி மன்றங்களில் தலைபோய் விடும் ஸந்தர்ப்பமான வியவஹாரங்கள் வந்து விட்டாலும் மேதாவிகளான வக்கீல்கள் எதையாவது சொல்லி மழுப்புகிற ரீதியிலே, பிரபல அட்வகேட்டான இவர் தாமும் இங்கு என்ன சொல்ல எழுவரென்ருல், "அந்த ப்ரபாவ நூல் யார் அச்சிட்டதாயிருந்தாலும் அவிச்வஸநீயம்; சுத்த தப்பு; ஸர்வாத்மநா அப்ரமாணம்" என்று இதைத் தான் திருப்பித் திருப்பிச் சொல்லவருவர். இது இப்படியே யிருக்கட்டும்; இவர் எழுதியுள்ள மற்றெரு விஷயத்தையுமெடுத்துக் கொள்வோம்.

18. 'வெள்ளைச் சாத்துப்படி யுத்ஸவம்' என்று மகுடமிட்டு, இது விஷயமாக ப்ர. அ. ஸ்வாமி ஸமீபகாலத்திலெழுதியிருந்த ஸ்ரீபெரும்பூதூர்ச் செய்திகளை யெல்லாம் பரக்க எழுதி அதன்மேல் தாம் ஒரு பெரிய கோட்டை பிடித்து விட்டதாக சுஷ்கப்ரஸங்கங்கள் செய்கிருர். அதைப்பற்றி மேலே திருவரங்க சுத்தி பண்ணுவோம். இதில் இவர் தாம் சில ஆராய்ச்சிகள் செய்கிருர்—"ஸ்வாமி எம்பெருமானர் வெள்ளையுடுத்தி வெளியேறி யிருப்பாரா? *ஆவாரார் துணையென்று துளங்கி நின்ற இளையாழ்வார் துயர்தீர்க்க நள்ளிருள் பாராதே பெருந்தேவியாருடனே சென்றுமீட்ட பேரருளாளன் அன்று எங்கே போனர்? தென்னத்தியூரர் கழலிணைக்கே பூண்ட அன்பாளரான ஸ்வாமியை பக்கத்திலே அமர்ந்து ஆராத்யதேவதையான பேரருளாளன் சைவ அரசனிடம் பங்கப்பட்டு வரவிட்டிருப்பாரா?.........நன்கு யோசியுங்கள்; ஸ்வாமி வெள்ளையுடுத்தினதாக எழுதுவது மிகமிக மானக்கேடு. முற்றும் துறந்து முக்கோல் பிடித்த முனியை இப்படியும் பரிபவப்படுத்துவதைக் காட்டிலும் அந்த ஆருந்திருநாளன்று ஒவ்வோர் ஊரிலும் உள்ள தென்கலை ஜீயர்கள் வெள்ளையுடுத்தி வெளியேவந்து ஸ்வாமியின் அனுஷ்டானம் என்ருல் நன்ரும். 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்ற பழமொழியை மாற்றிவிட ஸ்வாமியின் அனுஷ்டானம் இருக்குமாயின் உலகோர் சிரியாரோ? ஸ்ரீபகவத் ராமாநுஜ ஸித்தாந்தத்தைக் குலைக்க முற்பட்

டவர்கள் ஸ்வாமி பாஷ்யகாரரின் காலத்திலேயே அவரடியார்களாக வேஷமிட்டு ஸம்பிரதாயத்தில் உட்புகுந்துவிட்டனர்; யாதவ ப்ரகாசனென்கிற மாயாவி ஸ்வாமியை யடிபணிந்ததும் அவனடியார்களும் தங்கள் ஆசார்யரை வைணவராக ஆக்கிவிட்ட ராமாநுஜரிடம் உள்ள சீற்றத்தாலே பல்லாயிரக்கணக்கான அவர் சிடர்கள் வைணவ வேஷமிட்டுப் பல்வேறு துறைகளிலும் இம்மதத்தைக் கெடுக்கலாயினர். போதாதகுறைக்கு யஜ்ஞமூர்த்தியென்றோர் அத்வைதியும் ஸ்வாமியிடம் அடிபணிந்து வைணவரானார் இவர்களைச் சார்ந்தவர்களே நம் மதத்தைக் கெடுக்க வந்தவர்கள்; அவர்களே தென்கலையார்களென்னக் குறையில்லை." என்று கைபோனபடியெல்லாம் எழுதித் தீர்த்துவிட்டார். இந்த தூஷணைகளும் த்ருதீய ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமிக்கும் ஸ்ரீபரகாலமடாஸ்தானபதிகளுக்குமே சேர்ந்ததென்பதில் ஸந்தேஹமில்லை. ஸ்ரீபரகாலமடம் அச்சிட்டிருப்பதாக முன்னே எடுத்துக்காட்டின [500 வருஷங்களுக்கு முற்பட்டவர் செய்ததாக இவர்களே வெளியிட்டிருக்கும்] குருபரம்பரா ப்ரபாவத்தில் (பக்கம் 88, 89ல்)

"கூரத்தாழ்வான் உடையவருடைய த்ரிதண்டகாஷாயாதிகளை தரித்துக் கொண்டு அந்த மநுஷ்யனோடேபோக, பெரிய நம்பியும் கூடவெழுந்தருளினர். பின்பு நடாதூராழ்வான் முதலியாண்டான் திருக்குருகைப்பிரான்பிள்ளான் முதலானவர்கள் தேவரீர் இங்கிருக்கவொண்ணாதென்று உடையவருக்கு வெள்ளைசாத்தி மேல்நாட்டுக் கெழுந்தருளப்பண்ணிக் கொண்டுபோக"

இத்யாதி வாக்யங்கள் விளங்குகின்றன. இது கிடக்கட்டும். அதே புத்தகத்தில் வடுகநம்பி ஸாதித்த யதிராஜவைபவமென்கிற 114 சுலோகங்கள்கொண்ட பத்யப்ரபந்தம் ஸ்ரீபரகாலஸ்வாமியால் பரிசோதிக்கப்பட்டு அச்சாகியுள்ளது. "யதிராஜ—அந்தரங்கச்சாத்ர வடுகபூர்ணவிரசிதம் யதிராஜவைபவம் ஸம்பூரணம்" என்று பரகாலஸ்வாமி தமது திருக்கையாலெழுதி முடித்திருக்கிறார். ஆரம்பத்திலும் "ஸ்ரீராமாநுஜ யோகீந்த்ர க்ஷீரகைங்கர்ய சாலிநே, நமோ வடுக பூர்ணாய மஹநீய குணாய தே" என்று வடுகநம்பியின் தனியனை வெளியிட்டிருக்கிறார். இதனால் ஸாக்ஷாத் உடையவர் காலத்திலேயே இந்த யதிராஜவைபவம் அவதரித்ததென்பதை ஸ்ரீபரகாலமடம் கல்வெட்டாக்கி வைத்தது. இதில் 95, 96 சுலோகங்களாவன—

"காஷாயத்ருத் கூரபதிஸ் த்ரிதண்டீ ப்ராயாந் மஹாபூர்ணயுதஸ் து தத்ர,
வாத்ஸ்யேசமுக்யையஸ் ஸஹிதோ யதீச: சுக்லாம்பர: ப்ராப திசம் ப்ரதீசீம்.
தத்ர க்வசித் கைச்சந சிஷ்யபூதை: காஷாயதண்டாதி ஸமர்ப்பிதம் ஸ:,
சாஸ்த்ரோக்தமார்கேண புந: ப்ரக்ருஹ்ய யதாக்ரமாராதநதத்பரோபூத்." என்பன.

19. எம்பெருமானார் காலத்திலேயேயிருந்த கருடவாஹனபண்டிதர் இயற்றிய திவ்யஸூரிசரிதத்திலும் இக்கதை ஸ்பஷ்டமாக இருந்தாலும் அதிற்காட்டிலும் இந்த வடுகநம்பி நூலுக்கு மிக ஏற்றமுண்டு. ஸ்ரீபரகாலஸ்வாமி பரிஷ்கரித்து ஆதரித்து வெளியிட்டதென்கிற சிறப்பு தலையானது.

### ஸ்ரீபரகாலமடத்தை தூஷிப்பவர் இவரேயாயினர்

20. இந்த யதிராஜவைபவம் 90 வருஷங்களுக்கு முன்பு ஒருவிசை அச்சாகியுள்ளது; அதில் பலவகைப் பிழைகள் புகுந்திருந்ததனால் இது உடையவர் காலத்தில் அவதரித்ததாயிருக்குமோவென்று ஸந்தேஹிக்க இடமிருந்தது. ப்ரசண்ட பண்டிதோத்தமரான ஸ்ரீபரகாலஸ்வாமி ஓலை ஸ்ரீகோசங்களைக்

கொண்டு வெகு நன்ருக சோதித்து ஸுபரிஷ்காரமாக அச்சிட்டுவிட்டபடியால் எவ்வித சங்கையும் புகமுடியாதபடியாய்விட்டது. ஆக, வடகலை ஸம்ப்ரதாய துரந்தரர்களான மஹாவித்வான்கள் ஈஷத்தும் சங்கைகொள்ளாத சரித்திரங்களில் இவர் சங்கைகொண்டதோடு நில்லாமல் அபரிமித தூஷணைகளையும் சரமாரியாகப் பொழிந்துவிட்டார். யாதவப்ரகாச சிஷ்யர்களும் யஜ்ஞமூர்த்தி சிஷ்யர்களுமே ஸ்ரீராமாநுஜதர்சனத்தைக் குட்டிச்சுவராக்க தென்கலையார்களாக வந்து பிறந்தார்களென்று முடித்திட்டார். இப்போது உண்மை என்ன தேறிற்றென்ருல், அந்த யாதவப்ரகாச யஜ்ஞமூர்த்தி சிஷ்யர்கள் ராமாநுஜதர்சனத்தைக்கெடுக்க ப்ரஹ்மதந்த்ரஸ்வதந்த்ர ஸ்வாமிகளாகவும் பரகாலமடாதிபதிகளாகவும் தம்மடகார்யஸ்தர்களாகவும் வடிவெடுத்தார்களென்று இவரே நிஸ்ஸந்தேஹமாய் நிர்ணயித்ததாய்த் தேறிற்று. வேறு எதுவும் தேருது.

## நாஸ்திகர்களில் தலைமைபெற்று விட்டாரிவர்

21. ஈ. வெ. ராமஸ்வாமி நாய்க்கரென்பவர் ஸ்ரீராமாயண கதைகளில் பலவகையான அஸங்கதங்களிருக்கின்றனவென்று எடுத்துக்காட்டி 'கற்பனைக் கதைகளை நம்பாதீர்கள், அந்த கதைகளையெல்லாம் கொளுத்துங்கள்' என்று நாடெங்கும் பிரசாரம் செய்துவருகிருர். நம்மவர்களில் தலைவரான C. R. என்கிற மஹான் உத்தர ஸ்ரீராமாயண கதைகள் தனக்கு அடியோடு பிடிக்கவில்லையென்று காட்டி 'இந்த அவலக்ஷண புராணத்தை வான்மீகி முனிவர் ஒருகாலும் எழுதிவைத்திருக்கமாட்டார்' என்று எழுதித் தீர்த்துவிட்டார். இவர் "புலிக்குத் தன் காடு புறங்காடு கிடையாது" என்கிற கதையாய், தன் மதத்தில் பரிகணிதர்களாய் லோகமான்யர்களாக விளங்கும் பெரியார்கள் சங்காலேசமுமின்றி ஆதரித்துள்ள கதைகளையும் தூஷிக்கத் துணிந்துவிட்டார். "ப்ர. அ. ஸ்வாமியின் முரண்பாடுகள்" என்றதுபோய் "ஸ்வகீய ஸஜ்ஜனங்களின் முரண்பாடுகள்" என்றதாகத் தீர்ந்தொழிந்தது.

## இவர் திணறிநிற்கும்நிலைமை இது காணீர்

22. இனி, இவர் வாதிக்கப்போவ தென்னவென்ருல், பரகாலமடம் பதிப்பித்தாலென்ன? நரகாலயமடம் பதிப்பித்தாலென்ன? விஷயம் அஸங்கதமென்று தேறிவிட்டால் தள்ளித்தொலைக்க வேண்டியது தவிர வேறென்ன? என்று இவ்வழியிலேதான் வாதிப்பர். இவ்வழி தவிர வேறுவழி கிடையாதென்பது திண்ணம். வடுகநம்பி ஸாதித்ததாகப் பரகாலஸ்வாமி பரிஷ்கரித்து வெளியிட்டிருக்கிற யதிராஜவைபவத்தையும் பல அத்யாயங்களால் நிந்திக்கப் போகிருர். இந்த ஸந்தர்ப்பத்தில் கல்வெட்டாகத் தேறுகிற விஷயமொன்றே கவனிக்கத்தக்கது.

## ஸர்வாத்மநா நம் ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திக்கே வெற்றி.

23. இவர்களுடைய மதத்தில் ஆழ்வார்களைப்பற்றியோ ஆசாரியர்களைப் பற்றியோ திவ்யப்ரபந்தங்களைப்பற்றியோ நூல்கள் எழுதுவதற்கு நியாயமில்லை; எழுந்ததாகக் காணப்படுகின்றவை கோவில் சண்டைகள் ஏற்பட்ட பிறகு புதிதாகக் கல்பனைசெய்து எழுதிவைக்கப்பட்டவை. இத்யாதி விஷயங்களை ப்ர. அ. ஸ்வாமி பலகாலமாகப் பலகால் எழுதி சிலாசாஸனம் செய்திருக்கிருர். அதைப்பற்றி இதுகாறும் ஒருவரும் வாய்திறக்கவில்லை. இப்போது இவர் அதுதான் உண்மையென்று முடித்திட்டாராயிற்று. த்விதீய ப்ரஹ்மதந்த்ர

ஸ்வதந்த்ர ஸ்வாமி பன்னீராயிரப்படி குருபரம்பராப்ரபாவம் எழுதிவைத்தாரென்றும், அது லோபித்துவிட்டதாகவும் த்ருதீயப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி யெழுதிவைத்த மூவாயிரப்படியே இப்போதிருப்பதாகவும் கூறி அதை இவர்கள் பல பதிப்புச்செய்து வந்திருக்கிறார்கள். தேசிக சரித்ரம் தத்குமார சரித்ரம் என்று இவர்கள் சொல்லிவருகிற கதைகளும் அந்த மூவாயிரப்படி குருபரம்பராப்ரபாவத்திலுள்ளதேயன்றி வேறு எதிலும் ஒரு சகலங்கூட கிடையாது நயனாசார்யர் வைபவமென்று பேரேயொழிய அது மணவாளமாமுனிகளின் நிந்தாமயம். த்ருதீயப்ரஹ்மதந்த்ரஸ்வாமி மணவாளமாமுனிகள் காலத்திலிருந்தவரென்றும் அவர் அப்போதே மாமுனிகளை நிந்திக்க ஆரம்பித்துவிட்டாரென்றும் இவர் வகுப்பினர்கள் ஏககண்டமாகச் சொல்லுகிறார்கள். அந்த மூவாயிரப்படி ஸர்வாத்மனா அஸங்கதமென்றும் தீயினில் தூசாக்கவே தக்கதென்றும் இவர் இப்போது முடித்திட்டாரானபின்பு, ஸம்பிரதாயத்தில் இவ்வகுப்பினர் சொல்லிவருகிற கதைகளுக்கு எது மூலக்ரந்தமென்று கேட்டால் திசைமுகனைய் நிற்கவேண்டியது தவிர வேறுண்டோ? "விநாயகம் ப்ரகுர்வாணோ ரசயாமாஸ வாநரம்" என்கிற கதையாய், தென்கலை ஸம்பிரதாயத்தை தூஷிக்கவந்தவிவர் 'வடகலைமதம் நிர்மூலம்' என்று மறுவாய் திறக்க இடமில்லாதபடி முடித்துவைத்தாராயிற்று. இதன் சேஷத்தை மேலே பூர்த்திசெய்வோம்.

### பூர்வாசார்ய வைபவத்தில் இவருடைய துர்வாதங்களை யுதறித்தள்ளுதல்

24. கீழே சர்ச்சித்த எம்பெருமானார் சரித்திரத்தில்—ஸ்வாமி ராஜபயத்தாலே வெள்ளை சாத்திக்கொண்டெழுந்தருளினாரென்பது முழுப்பொய் யென்றும், விந்தியாடவியிலே நள்ளிருளில் வந்து ஒரு நொடிப்பொழுதில் காஞ்சியிலே கொண்டுசேர்த்துக் காப்பாற்றின பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் எங்கே போய்விட்டார்களென்றும் வீண் அட்டஹாஸங்களை வளர்த்தியிருக்கின்ற இவர் பலபல விஷயங்களுக்கு விடையிறுக்கக் கடமைப்பட்டவராகிறார். ஆசாரியர்களின் கதைகளில் குசோத்யங்கள் பண்ணுவதுபோல் பகவத்கதைகளிலும் குசோத்யங்கள் பண்ணினால் விடையிறுத்தேயாக வேண்டும் பிராமாணிகர்கள். சித்திரகூடத்தில் நடந்த காகவ்ருத்தாந்தம் தேசிகனுடைய ரகுவீரகத்யத்திலும் அடைக்கலப்பத்து முதற்பாட்டிலும் ஏறியிருப்பதனாலே அதைப் பொய்யென்னமாட்டாரிவர்; பிராட்டிபக்கல் அபராதப்பட்ட காகாசுரனை எத்திசையுமுழன்றோடி யிளைத்து விழச்செய்த ராமாஸ்த்ரம் இராவணன் அப்பிராட்டியை அபஹரிக்கும்போது எங்கே புக்கொளித்தது? வாலி தன்வாலிலே சுருட்டி நான்கு ஸமுத்ரத்திலும் தோய்த்துப் புழுபூச்சிகளை உதறித்தள்ளுமாபோலே தள்ளப்பெற்றவன் இராவணனென்பது சிறார்களுங்கூட அறிந்த விஷயம். அப்படிப்பட்ட வாலியை "ஏகேந பாணேந ஹதஸ் து வாலீ" என்னும்படி ஓரம்பினால் கொன்றிட்ட பெருமாள் இராவணனிடம் இடையிடையே பங்கமும் பட்டாரென்று கதை வாசிக்கிறோம். ஆண்டாள் "பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" என்று அவலீலையாகப் பேசுகிறாள். திருப்பாண் பெருமாளும் "இலங்கைக்கிறைவன் தலைபத்து உதிரவோட்டி ஓர் வெங்கணையுய்த்தவன்" என்று அவலீலையாகச் சொல்லுகிறார். பிறர் சொல்லுவதிருக்கட்டும்; "அங்குல்யக்ரேண தாந் ஹந்யாம் இச்சந்" என்று தாமே த்ருணப்ராயமாகப் பேசுகிறார். இத்தகைய சக்திவிசேஷங்களில் யாருக்கேனும் அதிசங்கையுண்டோ? சொல்லுகிற சக்திக்குத்தக்க காரியம் சிறிதுமில்லாமையால் அமிதமான சக்தியுள்ளதாகத் தெரிவிக்கிற பகுதிகளைப் பொய்யென்பதோ, அபரிமிதமான அசக்திகளைக்காட்டிக் கஷ்டங்களை யநுபவித்ததாகத் தெரிவிக்கிற பகுதிகளைப் பொய்யென்பதோ ஆக இரண்டத்தொன்று செய்தே யாகவேண்டு மிவர்க்கு.

25. இப்படியே க்ருஷ்ணவதாரத்திலும் சென்று பார்த்தால் சக்தியும் அசக்தியும் கலந்த கட்டியாகவே பிசிறி நிற்கும். *சூட்டுயர் மாடங்கள் சூழ்ந்து தோன்றும் துவராபதி* என்னப்பட்ட த்வாரகாபுரி ஏற்படுவதற்கு என்ன காரணம் தெரியுமோ? கண்ணன் பகைவரிடத்து அஞ்சின அச்சமேயென்று புராணம் கூறுகின்றது. கண்ணன் அஞ்சினனென்றால் இதை யார் நம்புவார்? அதையும் நம்பவேண்டா: உடையவர் அஞ்சினரென்பதையும் நம்பவேண்டா. [அதிமாநுஷஸ்தவே] *யத் வை ஜராஸுதபயாத் விபலாயதாஸ் த்வம்* இத்யாதி ச்லோகங்களில் ஆழ்வான்போல்வார் ப்ரச்நவ்பாஜேந மருமங்களை வெளியிட்டிருக்கிறார்கள். அப்படியே இவரும் எம்பெருமானையோ எம்பெருமானாரையோ நோக்கி ப்ரச்னங்கள் செய்து கொண்டு போதுபோக்கலாமத்தனை. எம்பெருமானை நோக்கிக் கேட்பதானால்,

பெருமானே! உடையவர்க்கு விந்த்யாடவியில் ஆச்சரியமாகக் கைகொடுத்த நீ திருவரங்கம் பெரியகோயிலில் எங்கே புக்கொளித்தாய்? தொண்டனூரில் ஆயிரக்கணக்கான மதாந்தரஸ்தர்களுக்கு ஒரேகாலத்தில் ஆயிரம் பைந்தலைய அனந்தனாய் ஸமாதானங்கள் ஸாதிக்கும்படி உடையவர்க்கு விசித்ர சக்தி கொடுத்த நீ அவ்வுடையவர்தாமே யஜ்ஞமூர்த்தியிடம் பதினெட்டு நாள் சிரமப்படும்படி கைவிட்டதேன்?

என்றிப்படி பல கேள்விகள் கேட்பது. இக்கேள்விகளையே சிறிதுமாற்றி எம்பெருமானாரை நோக்கியும் கேட்பது.

## இங்கே முக்கியமான கவனிப்பு

26. புராதன இதிஹாஸங்களில் அல்பபுத்திகளான நமக்குப் பலவகையான ஆசங்கைகள் தோன்றக்கூடும். அந்த இதிஹாஸங்கள் பிராமாணிக க்ரந்தங்களில் ஏறியிருப்பவையென்று தெரியவந்தால் அவற்றை ஆக்ஷேபிக்க நாம் வாய் திறக்கலாகாது; அப்ராமாணிக க்ரந்தங்களென்று நிர்த்தாரணம் செய்யப்பட்ட நூல்களில் உள்ள கதைகளானால் அவற்றைப்பற்றி எவ்வளவும் மறுப்பு உரைக்கலாம். ஸ்ரீராமாயண மஹாபாரதாதி ஸர்வஸம் ப்ரதிபங்க இதிஹாஸ புராணங்களில் காணும் கதைகளை ஆஸ்திகர்கள் க்ஷேபிக்கமாட்டார்கள். நாஸ்திகர்கள் க்ஷேபித்தால் கேள்வி முறையில்லை. அவர்கள் தாராளமாக க்ஷேபித்துக் கொண்டேயிருக்கிறார்கள். 'நம் பூர்வாசார்யர்களைப்பற்றின சரித்திரங்கள் விஷயத்தில் ஸ்மார்த்தமாத்வாதிகளான பிறர் ஆக்ஷேபம் கூறினால் அதில் கவலையில்லை. ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தங்களை அவர்கள் ப்ரமாணமாக ஒப்புக்கொள்ள வேண்டிய அவசியமற்றவர்களாதலால் சரித்திரங்களில் தங்கள் மனத்தில் தோன்றும் அநுபபத்திகளை வெளியிட்டு தாராளமாக தூஷிக்கலாமவர்கள். ஸ்ரீவைஷ்ணவர்களும் அவர்களோடொக்க தூஷிப்பதானால்—

## இங்கேதான் மிகமிக கவனிக்க வேண்டும்

27. இருகலையார்க்கும் சரித்திர நூல்கள் ஒன்றேயல்லாமல் வெவ்வேறு பட்டிருக்கின்றன. தென்கலையார்கள் தாங்களாதரிக்கும் சரித்திர நூல்களில் காணும் கதைகளை ப்ராமாணிகமென்று கொள்ளவும், அப்படியே வடகலையார்கள் தாங்களாதரிக்கும் சரித்திர நூல்களில் காணும் கதைகளை ப்ராமாணிகமென்று கொள்ளவும் ப்ராப்தம். "எங்கள் வகுப்பில் சரித்திர நூல் கிடையாது" என்று ஒருவரும் சொல்லப்போகாது. அப்படிச் சொல்லுமவர்களைப் புதிதாக வந்தேறிகளென்று நிர்ணயிக்கத் தடையே கிடையாது. தென்கலையார்கள் சில சரித்திர

நூல்களை ஆதரித்து வைத்துக் கொண்டிருப்பதுபோல வடகலையார்களும் வைத்துக் கொண்டிருக்க வேண்டும்; இல்லையானால் இவர்களை வந்தேறிகளென்று நிர்ணயிக்கத் தடையேயிராது. இந்த அவத்யத்தைப் பரிஹரித்துக் கொள்வதற்காக இவர்களும் தங்கள் பரமகுரு (500 ஆண்டுகட்குமுன்) எழுதி வைத்ததாக ஒரு சரித்திர நூலை ஆதரித்து வருகிறார்கள். அது கீழே விரிவாக மூதலிக்கப்பட்டதாயிற்று. அந்த நூலை இந்த தூஷகர் ஆதரிக்கிறாரா? இல்லையா? என்பது ஒரே கேள்வி. ஆதரிக்கிறேனென்றால், யாதவப்ரகாசர் தாயார் விஷயத்திலும் வெள்ளைசாத்தின விஷயத்திலும் இவர் செய்திருக்கும் உக்ர தூஷணங்கள் தன்முன்னோர்களை நோக்கி இட்டவையேயொழிய அஸ்மதாதிகளை நோக்கி இட்டவையல்ல என்று நாம் கீழேயெழுதினது சிலா லிகிதமாகும். இனி "அந்த சரித்திர நூலையோ, வடுகநம்பி ஸாதித்ததாக எங்கள் பெரியோர்கள் அச்சிட்டிருக்கிற யதிராஜவைபவத்தையோ நாங்கள் பிரமாணமாக வொப்புக் கொள்வதே கிடையாது, தென்கலையாருடைய சரித்திர நூல்களைப் போலே அவற்றையும் நாங்கள் தூஷிப்பவர்களே"யென்று சொல்லித் தீரவேண்டுமிவர் அப்போது பிராமாணிகமான வேறொரு சரித்திர நூலைக் காட்டியேயாகவேண்டுமிவர். அப்படி காட்டப்படுகிற நூல் இதுவரை இவர்களால் பரம்பரையாக ஆதரிக்கப்பட்டுவருகிற தென்பதையும் மூதலிக்கவேண்டும். அப்படிப்பட்ட புராதன சரித்திர நூல் இவர்களிடம் எதுவும் கிடையாதென்பதை நம் ஸ்வாமி ஜயபேரிமுழங்கப் பல நூல்களில்பேர்க்கவும் பேராதபடி நிலைநாட்டியிருக்கின்றார்.

28. பொய்கையாழ்வார்தொடங்கி வேதாந்ததேசிகன் நயனாராசார்யர் வரையிலுள்ள பூருவர்களுடைய சரித்திரங்களை இவர்கள் பிராமாணிகமானவொரு நூலைக்கொண்டே அனுபவித்தாக வேண்டும். அந்த நூல் த்ருதீயப்ரஹ்மதந்த்ர ஸ்வாமி யெழுதிவைத்ததென்று இவர்கள் கோஷ்டியில் வார்த்தை. அதையே பெரிய மடமொன்று ஆதரித்து அச்சிட்டு வைத்தது. அது இப்போது அவலக்ஷண நூலாக இவர்களால் ஒதுக்கித் தள்ளப்பட்டுவிட்டது. தொலையட்டுமிது. வேறு எந்த சரித்திர நூல் உங்கள் மதத்தில் பிராமாணிகமாக விளங்குகின்றது? காட்டுங்கள் என்றால் வாயைக் கையைத் திறக்கமாட்டார்களிவர்கள். ஆழ்வார்களின் சரித்திரமும் இதர ஆசாரியர்களின் சரித்திரமும் கிடக்கட்டும். தேசிகன் தேசிகன் ஸ்வாமி தேசிகன் என்று உருப்போடுகிற ஆசார்யஸார்வபௌமருடைய சரித்திரத்திற்கும் தத்குமாரருடைய சரித்திரத்திற்கும் எது மூல ப்ரமாணம்? என்று கேட்டால் கையை விரிக்கவேண்டியது தவிர வேறுண்டோ? ஆசார்ய சம்புதான் மூலப்ரமாணமென்று பிராமாணிகர்கள் சொல்லுவதுண்டு. அந்நூல் இவர்களுக்கு விஷமாய்விட்டது. ஏன்? தாங்கள் நவீன காலத்தில் கற்பனை பண்ணிச் சொல்லிவரும் கதைகளுக்கு அந்த நூல் ஈஷத்தும் இடம் கொடாமையினாலே. ஆக இவர்கள் சொல்லிவரும் கதைகளுக்கு மூலப்ரமாணம் எதுவுமே கிடையாததலால் இவர்கள் வந்தேறிகளென்பது திடமாயிற்று.

29. இந்த நமது நூலில் பக்கம் 10 முதல்வரியை இப்போது திரும்பவும் படித்துப்பாருங்கள்—"இதிலிருந்து வடகலைமதத்தின் ஊழல்கள் வெட்டவெளிச்சமாகிறபடியை விரிவுக்கு அஞ்சாமல் காட்டுகிறோம் காண்மின்" என்று அங்கு நாம் எழுதியிருப்பது. அந்த ப்ரதிஜ்ஞையை வழுவற நிறைவேற்றினோமானோம். ஆனால் இதெல்லாம் இப்போது நாம் புதிதாகச் செய்யும் நிரூபணமன்று. ப்ர. அ ஸ்வாமி பன்முறையும் செய்திருக்கிற அபேத்யமான நிரூபணங்களிவை. இதற்கு பதில் சொல்ல சரக்கில்லாமையாலே 'ஸ்வாமி அநியாயமாக தேசிகனை தூஷிக்கிறார், வடகலையாரை தூஷிக்கிறார்' என்று வயிற்றெரிச்சல் விளங்கப் பறைசாற்றி வருகிறார்கள். விஷயதத்துவம் இவ்வளவே,

இந்த அபத்தச்சுவடி பக்கம் 16ல் எழுதுகிறது—"கீழே திருமண்கள் கோயிலில் புகுகிற வழி எப்படி என்பதை எழுதினேம்; இப்போது ஐதிஹ்யம் எப்படி கோயிலில் புகுகிறது பாருங்கள்" என்று. காஞ்சீபுரத்தில் தேரடி பக்கத்திலுள்ள ஒரு அனுமார் கோவிலில் கொஞ்சம் கொஞ்சமாகத் தென்கலைத் திருமண் புகுந்ததாம்; அது வியாஜ்ஜியத்தினல் அடிபட்டுப் போய்விட்டதாம். இப்படித்தான் ஆங்காங்கு திவ்யதேசங்களில் தென்கலைத் திருமண் புகுந்து விட்டதாம் இதுதான் கோவில்களில் திருமண் புகுகிற வழியாம். ஸ்ரீரங்கத்தில் வேதாந்தாசாரியர்க்குத் தென்கலைத் திருமணையழித்து ஒரு நிமிஷம் வடகலைத் திருமண் போட்டதற்கு ஆயிரம் ரூபாய் சொளசொளவென்று செலுத்தி ஹை கோர்ட்டு வரையில் காயம் செய்து கொண்டு வந்தவர்கள் மானிகளாயிருந்தால் திருமண் பேச்சைத் தொடுவர்களா? இதை எத்தனை தடவை யெழுதினலும் புநருக்தி தோஷம் வாராதன்றே. "நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாகலாமே" என்று ஒரு லோகோக்தியுண்டு. தூக்கு போட்டுக் கொண்டு சாவது, விஷ முண்டு சாவது..........என்று சில வழிகளைக் காண்கிறேமேயொழிய நாக்கைப் பிடுங்கிக் கொண்டு சாவதென்பதை எங்கும் காண்பதில்லை. ஆனலும் லோகோக்தி இப்படி எங்கும் பரவியுள்ளது. பொறுக்க முடியாத பரிபவம் நேர்ந்தால் நாக்கைப்பிடுங்கிக் கொண்டு சாவதுண்டு என்று பெரியார் சொல்லு கிறர்கள். இவர்களுக்கு இதற்கு மேற்படவும் பரிபவமுண்டோ? இதற்கும் அது நிகழவில்லையென்றல் அந்த லோகோக்திக்கு வேறு எங்குத்தான் உபயோகமோ?

ஸ்ரீபெரும்பூதூரில் வெள்ளை சாத்துப்படியுத்ஸவம் 70, 80 வருஷங் களுக்கு முன்புதான் ஏற்பட்டதென்பதையும் அதற்கு முன்பு இல்லையென்பதை யும் கொண்டு "ஐதிஹ்யம் எப்படி கோவிலில் புகுகிறது பாருங்கள்" என் கிறர்களிவர்கள். இங்கு நன்கு கேளுங்கள். ஆங்காங்கு பெரிய பெரிய தேவஸ்தானங்களில் பஞ்சபர்வ ப்ரஹ்மோத்ஸவாதிகள் தவிர ஐதிஹ்யோத் ஸவங்களும் சில பல நடப்பதுண்டு. அவை ஒன்றுகூட புராதனமல்ல. ஒவ் வொரு ஸமயத்தில்தான் ஒவ்வொன்று ஏற்பட்டது. நம்பாடுவான் ஐதிஹ்யம் எந்த யுகத்தில் தோன்றியது; அது ஸ்ரீரங்கத்தில் பட்டர் காலத்தில்தான் ஆலயப்ரவேசம் பண்ணிற்று. காலக்ரமேண மற்ற திவ்யதேசங்களில் சென்ற நூற்றண்டிலும் இந்த நூற்றண்டிலும் புகத்தொடங்கியது. இதனலென்ன கெடுதல்? தேவப்பெருமாளுக்கு வேடன் திருக்கோலம் சாத்தப்பெறுமுத்ஸவம் வெகு ஸமீபகாலத்தில்தான் ஆரம்பமாகி நடந்து வருகிறது. இது ஐதிஹ் யோத்ஸவமே "ததாத்வே நூதநம் ஸர்வம் ஆயத்யாஞ்ச புராதநம்" என்று தேசிகர் 600 வருடங்களுக்கு முன்பே ஸாதித்திருக்கிறர்.

திருவெஃகாவில் தையில் மகத்தன்று நடந்து வருகிற ஐதிஹ்யோத் ஸவமும் 100 or 120 வருஷங்களுக்கு உட்பட்டதே. இப்படி நூறுயிரம் விஷயங்கள் எடுத்துக் காட்டலாம். *பழையன கழிதலும் புதியன புகுதலும் எங்குமுண்டு. கோவில்களில் நடைபெறும் உத்ஸவத்தைப்பற்றி என்ன விசாரம்? ஐதிஹ்யம் துஷ்டமா? அதுஷ்டமா? என்பதொன்றே விமர்சிக்க

வுரியது. ஆகாசத்திலே சித்திரமெழுதுகிற கதையில் நிற்கிறது இவர்களின் தாண்டவம். ஸ்வமதமின்னது, பரமதமின்னது என்பதைக்கூட அறியார் களந்தோ இவர்கள்! அந்த 16ஆம் பக்கத்திலேயே "குருபரம்பரையை தென்னுசார்ய ஸம்பிரதாயத்தில் எழுதியவர் அழகியமணவாளப்பெருமாள் நாயனுர்" என்றெழுதி யுள்ளார்கள்; நம்பிள்ளை திருவடிகளான பின்பழகிய பெருமாள் ஜீயரே ஆருயிரப்படி குருபரம்பராப்ரபாவமருளிச் செய்தவரென்பது ஜகத்ப்ரஸித்தமும் நிர்விவாதமுமானது. ஓரிழவுமறியாதவிவர்கள் வேலையற்று ஏதோ எழுதிவைத்தால் அதற்கு மறுப்பெழுத நாம் புகுவது மானக்கேடு. ஸமீபகாலத்திலிருந்து மறைந்த வாதூலசிஷ்யரான புதுப்பேர் ஜீயரை அனந்தாண்பிள்ளை வம்சஸ்தராக எழுதுகிறதுகள். தெரியாத விஷயங்களில் வீண் ப்ரஸங்கம் செய்து பரிபவப்படுவது எதற்காக? எல்லாமிப்படியே.

இந்த அபத்தச்சுவடிக்கு கர்த்தாவின் பெயர் இல்லையென்று முதலில் எழுதினேம். ஸமீபகாலத்தில் ஒரு பெயர் முளைத்திருப்பதாகத் தெரிய வருகிறது. ஸ்ரீஜகதாசார்யஸிம்ஹாஸநாதிபதிஸ்வாமி மூலமாகவே இந்த அபத்தச்சுவடி பாறுபாருக்கி நீறுநீறுக்கி யொழிக்கப்படுவதறிந்து நான் விச்ராந்தி பெறுகிறேன். இச்சிறு நூலை யச்சிட்டு ஸ்ரீஸ்வாமி ஸன்னிதியில் ஸமர்ப்பித்து விட்டேன்.

இந்நூலின் உபக்ரமத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட சாமா திருமலைதாதாசாரியரென்பவர் ஸதாசார்யப்படியென்றும் ஸச்சிஷ்யப்படியென்றும் இரண்டு சுவடிகளை யெழுதி அச்சிட்டிருக்கிறுர். முதலது ஸதாசார்யதூஷணம். இரண்டாவது ஸயூத்த்யதூஷணம். அந்த இரண்டாவதில் அநங்விதமான அனேக ஐதிஹ்யங்களை யெழுதியுள்ளார். ஒரு குடும்பத்திற்கு (வாய் பிரதர்ஸ்) என்று பெயர் வைத்து, தமையன் வாய்க்குத் தேடுமவர் என்றும், தம்பி வாய்தேடுமவர் என்றும், தம்பியின் பெருமையை நெல்லூர் கோர்ட்டில் அறியலாமென்றும், தமையன் பெருமையைக் கச்சிவீதிகளில் இருள்மிக்க திண்ணைகளில் அறியலா மென்றும் எழுதியுள்ளார். இப்படி பல ஐதிஹ்யங்களெழுதியிருக்கிறுர். இன்னதென்று ஒருவர்க்கும் புரியாதபடி யெழுதி என்ன லாபம்? இவர்களது தூஷணச்சுவடியும் அத்தகையதே. அதை இவர்களே பிரவசனபாராயணங்கள் செய்து கொண்டு களித்திடுக.

ஸ்ரீமான் R. Srinivasan Esq., Steno-Central Stores. M/s. Simpson & Co. Ltd., Madras அவர்களும், ஸ்ரீமான் உவே. ஜ்யோதிர்பூஷண தி. ராஜமையங்கார் ஸ்வாமி ராஜமன்னுர் ஸன்னிதி. (தற்காலம்—திருவையாறு) அவர்களும் அஜ்ஞானச்சுடர் விளக்குக்கு விரிவான மறுப்பு நூல்கள் எழுதுவதாகத் தெரிந்த தனுலும் நான் நிற்கிறேன். .... .... ... .... *

**A. M.** கன்னன்ராகவாசாரியர்,
ப்ளாட் நெ. 20, "ஸ்ரீவத்ஸபவனம்"
தியாகராயநகர்

---

குமரன் பிரஸ், சென்னை-1.

Rgd. No. 2975 ஸ்ரீராமாநுஜன்

கிடைக்குமிடங்கள்:—

(1) க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்.

(2) காராலபாடி ராதாகிருஷ்ணய்யா,
229, கோவிந்தப்ப நாயகன் தெரு, மதராஸ்—1

(3) G. ரங்கைய நாயுடு,
26, குருவப்ப செட்டி தெரு, சிந்தாத்ரிபேட்டை, மதராஸ்—2
(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)



If un-delivered please return to:
**P. B. ANNANGARACHARYA,**
L KANCHEEPURAM.




Sri. Vangeepuram,
Raghavacharya Swami,
[illegible]: (Mysore Distt.)

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Satgrantha Prakasana Sabha.
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press
Sannidhi Street, L. Kancheepuram.